

# மூலிகை மணி

மலர் 14] காளயுக்தி ஸ்ரீ ஆவணி-புரட்டாசி [இதழ் 10 & 11

ஆசிரியர் : வேலூர் டாக்டர் ஏ. ஆர். கண்ணப்பர், R.M.P.

விலை ரூ. 1-50

கடுகுச் செடி



(BRASSICA NIGRA)

221-வது மூலிகை!

# இலவச வெளியீடு

## சந்தா அன்பர்கள் கவனிக்க

மூலிகை மணிக்கு
ஓராண்டுச் சந்தா
தொகையாக ரூ. 9-ஐ
உடனடியாகச் செலுத்தும்
சந்தா அன்பர்கட்கு மட்டும்
வருகின்ற கார்த்திகை
இதழுடன், ஆசிரியர்
கண்ணப்பர் அண்மையில்
எழுதியுள்ள

## காய்கறிகளின் பயன்

எனும் நூல்
(ரூ. 3 விலையுள்ளது)
இலவசமாக அளிக்கப்படும்.

உடனே ரூ. 9-ஐ

ஆசிரியர், மூலிகை மணி,
19, அருளாம்பாள் தெரு,
தி. நகர், சென்னை-600017

எனும் முகவரிக்கு M. O. அனுப்பிப் பதிவு செய்து
கொள்ளுங்கள்

- மூலிகைகளின் பட விளக்கம்
- வாசகர்களின் நோய் பற்றிய கேள்வி — பதில்
- உடல் நலக் கட்டுரைகள்
- மருத்துவக் குறிப்புகள்
- பெண்கள் பகுதி
- சித்தர்கள் வரலாறு
- சித்த மருத்துவ வளர்ச்சிக்கான திட்டங்கள்

என பல்வேறு வகைப்பட்ட மருத்துவக் களஞ்சியங்களை மாதந்தோறும் தாங்கி வரும் மூலிகை மணி—நல்முறை நல்முறைக்கும் உதவும் ஓர் உன்னத சொத்து. உடனடியாக சந்தா செலுத்தி இலவச வெளியீட்டினைப் பெறுங்கள்.

## கவனிக்க....

ஏற்கெனவே ஓராண்டு சந்தா அனுப்பியவர்கள், மூன்றாண்டு சந்தா அனுப்பியவர்களும்கூட அடுத்த ஓர் ஆண்டுக்குரிய சந்தா தொகை ரூ. 9 செலுத்தி, இலவச வெளியீட்டினைப் பெற வேண்டுகிறோம்.



# "செந்தில் ஆண்டவா!"

பொன் வேண்டேன்; பொருளும் வேண்டேன்;
முருகா உந்தன்
பூமுகத்தை பார்த்தல் ஒன்றே வேண்டுகிறேன்!
மண் வேண்டேன்; பெண்ணும் வேண்டேன்;
முருகா உந்தன்
மனமாற நினைத்தல் ஒன்றே வேண்டுகிறேன்!
பெரும்புகழ் வேண்டேன்; அருங்கனியும் வேண்டேன்;
முருகா உந்தன்
பெருமைதனை பேசுதல் ஒன்றே வேண்டுகிறேன்!
புத்தாடை வேண்டேன்; முத்தாபரணங்களும் [வேண்டேன்;
முருகா உந்தன்
நித்தநித்தம் பாடுதல் ஒன்றே வேண்டுகிறேன்!
சொத்துசுகம் வேண்டேன்; சொகுசான வாழ்வும் [வேண்டேன்;
செந்தில் ஆண்டவா
சித்த மருத்துவம் செகமெலாம் பரவுதலொன்றே
வேண்டுகிறேன்!

— அல்லூர் மு. பெரியசாமி

# 'மூலிகை மணி'

[தமிழ் மருத்துவத் திங்கள் இதழ்]

ஆசிரியரும் வெளியிடுபவரும்

தினமணி புகழ்

வேலூர் மருத்துவர் : ஆ. இரா. கண்ணப்பர், R. M. P.

ஆண்டுச் சந்தா ரூ. 9-00 தனி இதழ் 0-75 காசு

மூவாண்டுச் சந்தா ரூ. 27-00 ஆயுள் சந்தா ரூ. 251-00


## ஆவணி—புரட்டாசி இதழில்



## கவனிக்க...

அச்சுப் பொறிகள் பழுது பட்டிருப்பதால் ஆவணி, புரட்டாசி ஐப்பசி இதழ்கள் தயாரிப்பில் தவிர்க்க இயலாத தாமதமாகி வருகிறது. டிசம்பர் முதல் புதிய அச்சுப் பொறிகள் இயங்க இருப்பதால், இதழ் தயாரிப்பில் காலதாமதமாகாது என்பதை தெரிவித்துக் கொள்வதுடன் இக்காலதாமதத்தினை அன்பர்கள் பொறுத்தருளவும் வேண்டுகிறோம். ஐப்பசி இதழ் விரைவில் வெளிவரும். கார்த்திகை இதழ் — இலவச வெளியீட்டுடன் டிசம்பர் 15 தேதிக்கு மேல் வெளிவரும். எனவே சந்தா முடிவடையும் அன்பர்கள் உடனடியாக ரூ. 9,- M. O. அனுப்பி புதுப்பித்துக் கொள்ள வேண்டுகிறோம்.

—ஆசிரியர்

உ
முருகா

ஐந்துகரத்தனை யானை முகத்தனை
இந்தினிளம்பிறை போலு மெயிற்றனை
நந்திமகன்தனை ஞானக் கொழுந்தனை
புந்தியில்வைத்தடி போற்று கின்றேனே.




எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே.
—தாயுமானவர்.

மலர் 14] காளயுக்தி௵ ஆவணி-புரட்டாசி௴ [இதழ் 10 & 11

அமைச்சருடன் சிறப்புப் பேட்டி (தொடர்ச்சி-III)

# முதல்வர் அளித்த நல்முத்து

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

அமைச்சர்: எதையுமே, ஓர் அளவுகோல் வைத்துதான் பார்க்க வேண்டும். அளவு கோல் இல்லாமல் பார்ப்பது தவறாக முடிந்துவிடும்.

கேள்வி: அளவு கோல் வைத்து ஆராய்வது நல்லதுதான். பொறுத்தமான-நடைமுறை சாத்தியமானதாக அந்த அளவு கோல் அமைதல் வேண்டும். சித்த மருத்துவர்களின் மருந்து செய்முறைகளை அரசாங்கமே முயற்சித்து தொகுத்து-வல்லுநர்கள் துணையோடு, அவற்றின் வன்மை மென்மைகளை ஆராய்ந்து, எது உண்மையோ, அதனை systamatise செய்து-'ஒரு பார்ம

கோபியா' போல் வெளியிட்டுவிட்டால் சித்த மருந்துகளை மூடி மறைக்கும் பிரச்னையே இல்லாமல் போய்விடுகிறது. இப்படிப் பட்ட ஓர் முயற்சியை அரசு அறிவிக்குமேயானால்—நல்ல சித்த மருந்துகளை அளிப்போர்க்கு உரிய மான்யம் வழங்கப்படும் என்று அறிவித்தால், பல சித்த மருந்துகள் வெளிவர வாய்ப் புண்டு. உதாரணமாக, மேக நோய் போன்ற சர்ம நோய் களுக்கு, என் தந்தையாரே, நல்லதொரு மருந்தினை தயாரித்து பலருக்கும் கொடுத்து குணமாக்கியுள்ளார். இந்த முறையை— எந்த பிரதிபலனும் எதிர்பார்க்காமல் வெளியிட வேண்டும் என்பதில் என்ன நியாயம் இருக்கிறது. அதற்குமாறாக, அரசாங்கம், நல்ல குணமளிக்கும் சித்த மருந்துகளுக்கு மான்யம் உண்டு என்று அறிவித்து ஊக்கப்படுத்தினால், எங்கள் முறை உள்பட பல புகழ்பெற்ற சித்த மருந்துகளை உலகுக்கு அளிக்க வாய்ப்புண்டு. ஏனென்றால், பரம்பரையாக பயனளித்து வரும் சித்த மருந்துகளை நம்பித்தான் எந்தவொரு சித்த மருத்துவனும், வாழ்க்கையை நடத்த வேண்டியுள்ளது. வாழ்க்கைக்கு உயிரோட்டமாயிருக்கும் அந்த மருந்தை பிரதி பலன் கருதாமல், வெளியிட வேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. இந்த சமயத்தில் ஆங்கில மருந்துகளையும்— அவற்றின் முறையையும் ஒப்பிட்டு, அவர்கள் வெளியிடு கின்றார்கள்—நீங்கள் மறைத்து வருகின்றீர்கள் என்று குற்றம் சாட்டி ஒதுக்கினால் ஆதரவின்றி மறைந்துவிடும். ஆங்கில மருந்துகள் செய் முறைகள் ஆராய்ச்சியும், கூட்டு முயற்சி யாலும் விளைவது. சித்த மருந்துகள் அனுபவத்தையும், பரம் பரை பின்னணியும் கொண்டு தனி மனிதன் முயற்சியால் உரு வாகிறது. இந்த அடிப்படையைப் புரிந்துகொண்டு மறைந்து வரும் மருத்துவ முறைகளை வெளிக்கொணர அரசு தரப்பில் தான் தீவிர முயற்சி எடுக்க வேண்டும் என்பது எனது வேண்டுகோள்.

அமைச்சர்: பெனிசிலின் கண்டுபிடித்தவர்—இம்மாதிரி சொல்லியிருந் தால், அந்த மருந்து உலகுக்குக் கிடைத்திருக்குமா? இம் மாதிரி ராயல்டி கொடுத்தால்தான், பெனிசிலின் முறையை அறிவிப்பேன் என்று சொல்லியிருந்தால் இலட்சக்கணக்கான நோயாளிகள் இறந்திருப்பார்கள்.

கேள்வி: தாங்கள் ஒன்றை கவனிக்க வேண்டும். பெனிசிலின் முறையை அளித்த அவருக்கு இன்று உலகெங்குமிருந்து ராயல்டி போய்க்கொண்டிருக்கின்றது. மேலும் அப்படிப்பட்ட முன்னுதா

ரணங்கள் இங்கு இல்லாமையே, சித்த மருத்துவர்கள், மருந்துகளை அறிவிக்காததற்கு அடிப்படை காரணம். தரமான பல சித்த மருத்துவர்களிடம் இருந்தும் கூட, அதனைப் பெறவோ, அல்லது ஊக்கப்படுத்தவோ, அரசாங்கம் எந்த திட்டத்தையும் இதுவரை அறிவிக்கவில்லை! இனிமேலாவது அந்த அறிவிப்பினை தாங்களாவது செய்ய வேண்டும் என்பதற்குத்தான், நான் இப்படி வாதாடுகிறேன்.

அமைச்சர்: தரமான சித்த மருந்துகளை இதுவரை யாராவது அளித்து அரசாங்கம் மறுத்துள்ளதா? இல்லையே! அளிக்கவில்லையே என்ற குறைதான் இருக்கிறதே யொழிய மறுத்துள்ளதாக செய்தி இல்லையே!



கேள்வி: இங்கேயும் ஒரு விளக்கம் தர விரும்புகிறேன். அப்படி தரமான சித்த மருந்துகளை அளிக்கும்போது, அது பற்றிய 'Literature' இருக்கிறதா என்று கேட்டு, இல்லையென்றால், ஆரம்பத்திலேயே ஒதுக்கிவிடுகிறார்கள்.

அமைச்சர்: ஆமாம்! 'Literature' இல்லாமல் எப்படி மருந்து முறையை ஏற்பது?

கேள்வி: பரம்பரையாக அனுபவத்தில் பலனளித்து வரும் ஒரு மருந்துக்கு 'Literature' எப்படி கிடைக்கும். Literature இல்லாததி

ஞுலேயே, தரமான மருந்து இல்லை என்று ஏன் ஒதுக்க வேண்டும். இப்படிப்பட்ட குறைகளை நீக்குவதற்குத்தான், நான் ஒரு திட்டத்தை நெடுங்காலமாகக் கூறி வருகிறேன். தரமான சித்த மருந்துகளை அங்கிகரித்து ஆய்வு செய்ய, ஆங்கில மருத்துவமுறை வல்லுநர்கள்; உதாரணமாக, டாக்டர் எம். நடராசன், டாக்டர் இலலிதா காமேசுவரன் போன்றவர்களையும், இந்திய மருத்தவ முறையில் தேர்ச்சி பெற்றவர்களையும் ஒருங்கிணைத்து 'சித்த மருந்து ஆய்வுக் கூட்டுக் குழு' என்ற ஓர் அமைப்பின் கீழ், சித்த மருந்துகளை தரமான விதிகளின் கீழ் Standardise செய்துவிட்டால் பல மருந்துகளை உலகுக்கு அளிக்கலாம் என்பது என் எண்ணம். அரசாங்கம் தீவிரமாக ஆலோசித்து செய்ய வேண்டிய அவசியமான பணியுமாகும். இதற்கு உங்களைப் போன்ற ஆர்வமுள்ள அமைச்சர் Persona-ஆக Interest எடுத்து செய்ய வேண்டும்.

**அமைச்சர்: இங்கு நீங்க கொஞ்சம் கவனமாக கேட்க வேண்டும். குறுக்கே ஏதும் பேசாமல், நான் சொல்வதை கேட்டுக்கொள்ளுங்கள்.**

சித்த மருத்துவர்களை ஒன்ருக சேர்ப்பது என்பது நடக்காத காரியம். இந்த சித்த வைத்தியர் அந்த சித்த வைத்தியரை குறை சொல்லுவார். திருச்சிக்காரர் திருநெல்வேலிகாரரை குறை சொல்லுவார். இப்படிப்பட்டவர்களை ஒன்று சேர்ப்பது என்பது நடக்காத காரியம். இந்த நிலைமையில் Coordinate Committee எப்படிப் போடுவது. வேலூர், சித்த மருந்துகளுக்கு Literature கேட்பது தவறல்ல. பெனிசிலின் நல்ல மருந்துதான். ஆனுலும் சிலருக்கு அலர்ஜியாகி, ரியாக்ஷன் ஆகிவிடுகிறது. அப்படிப்பட்ட நிலையில் அதில் என்ன மருந்து கலந்துள்ளது என்பது தெரிந்தால்தான், அதற்கு மாற்று மருந்து கொடுக்க முடியும். அதற்குத்தான் Literature கேட்கிருர்கள். சித்த மருந்துகள் நல்ல மருந்துகளாக இருந்தாலும் 'ரியாக்ஷன்' இருப்பதை மறுக்க முடியாது. வீரம், பூரம் போன்ற பாஷாணங்களை அதிக அளவில் சேர்க்கும் போது நிச்சயமாக ரியாக்ஷன் இருக்கத்தான் செய்யும் அப்படிப்பட்ட நிலையில், Literature இல்லையெனில் எப்படி மாற்று மருந்து தர முடியும்! அதனுல், Literature கேட்பது தவறல்ல. அதில்லாமல் பார்மகோபியா, தயாரிப்பது முடியாத காரியம் என்பது என் கருத்து.

கேள்வி: நீங்கள் கூறிய கருத்துக்கள் ஓரளவுக்கு உடன்பாடனவைதான். படித்தவர்கள் இக் கருத்தைப் புரிந்துகொள்வார்கள். ஆனுல் பரம்பரை அனுபவத்தால் வளர்ந்து, வாழ்ந்து வரும் சித்த மருத்துவர்களுக்கு இவற்றை எடுத்துச் சொல்லி, அவர்களிடமிருந்து நல்ல மருந்துகளைப் பெற Sympathy ஆக Move-செய்வது பயனளிக்காதா? எடுத்த எடுப்பிலேயே ஒதுக்கி விடுவது எரிச்சலூட்டுவதாகாதோ? இந்நிலையில் துணிந்து எந்த சித்த மருத்துவன் Formula-வைக் கூறுவான். அதற்காகத்தான் அனுதாப உணர்வுடன், செயல்படக் கூடிய 'கூட்டுக் குழு' ஒன்றினை அமைக்க வேண்டும் என்கிறேன்.

அமைச்சர்: ஒவ்வொரு சித்த மருத்துவரும் ஒவ்வொரு முறையில் மருந்து தயாரிப்பார்கள். குழந்தைகளுக்கு ஒரு எண்ணை கொடுப்பார்கள். ஒவ்வொரு சித்த வைத்தியரும் ஒவ்வொரு முறையில் அதனைத் தயாரித்து தருவார்கள். எந்த Formula-லே செய்வார்கள் என்று தெரியாது. அவரவர் வீட்டில் அவரவர் முறைப்படி செய்து தருவார்கள். இப்படி வீட்டு வைத்தியமாக ஆக்கிவிட்டார்களே தவிர, பலருக்கும் தெரியும் வகையில் 'நாட்டு வைத்தியமாக' மாற்றவில்லை. உண்மையிலேயே 'நாட்டு வைத்தியமாக' மாறும்போதுதான், நாட்டு மக்களுக்குப் பயன்படும்.



கேள்வி : அரசாங்கம், இதனை நாட்டு வைத்தியமாக்க, எந்த அள வுக்குத் தயாராகி முன்வருகிறது என்று தெரிந்திருந்தால், பல சித்த மருத்துவர்கள், இதனை வளர்க்கவும், பரப்பவும் முன் வரலாமல்லவா ?

அமைச்சர்: நீங்க நல்ல மருந்துகளைத் தயாரித்து இன்னின்ன நோய் களைத் தீர்க்கும், இதில் இன்னின்ன மருந்துகள் உள்ளன என்று Formula கூறி, அதனை Examine செய்து பலனைக் கூறிப் பயன்படுத்தலாம் என்று ஒப்புதல் அளிக்க முன்வந்தால்- அப்படி ஆய்வு செய்து, மருந்து நல்ல மருந்து என்று Proof ஆகிவிட்டால், நோயாளிகளுக்குக் கொடுப்பதால் ஆகும் செலவை அரசு கொடுக்கும். யார் கூற முன் வருகிறார்கள்? அண்மையில் ஓர் அனுபவம். 'போலியோ' நோய்க்கு ஒருவர் மருந்தை கொடுத்து குணமாக்கி வருகிறார். நானும் அவரைப் பாராட்டிவிட்டு அம் மருந்தைப் பற்றிக் கேட்டேன். ஓமியோபதி மருந்து ஒன்றுடன் ஏதோ ஒரு மூலிகையைக் கலந்து கொடுப்பதாகக் கூறினர். 'என்ன மூலிகை?' என்று கேட்டேன். 'தெரியாது' என்று கூறிவிட் டார். அவருக்கு அந்த மூலிகை தெரியும்! ஆனாலும் இரக சியம் என்று கருதி 'தெரியாது' கூறி மறத்துவிட்டார். இத் தனைக்கும் அவர் சாதாரணமானவரல்ல! ஆந்திராவில் உள்ள ஓமியோபதி மருத்துவமனையில் பணிபுரியும் பேராசிரியர். படித்தவரே இப்படி இருந்தால், மற்றவர்களைப் பற்றி எப்படிக் கூறமுடியும் ?

கேள்வி : of course! இது பெரிய Drawbackதான். out of all these drawbacks, we have to do something-என்ற நிலையில்தான் இருக்கிறோம்.

அமைச்சர் : மெதுவாகத்தான் செய்யமுடியும்! அறிஞர் அண்ணாவே Slow and steady Progress-என்றும், My steps are measured- என்றும் கூறியுள்ளார். மெதுவாகவும், அளவாகவும்தான் எந்த முன்னேற்றத்தையும் அடையமுடியும், சித்த மருந்து களை முன்னேற்ற measured step-ல் செல்வதுதான் நல்லது.

கேள்வி : நான் ஒன்றும் all of sudden செய்துவிட முடியும் என்று கூறவில்லை-துறைகூறிக் கொண்டிருப்பதைவிட மெதுவாகவும், அளவாகவும் ஆதரவு அளித்தாலே போதுமானதாகும். ஆனால் கடந்த இரண்டாண்டுகளாக, அதிலும் Emergency

Periodலே அதிக இழப்பு-எந்தவித முன்னேற்றமும் இல்லாமல் ஏற்பட்டுவிட்டது.

அமைச்சர்: எமர்ஜென்சி நேரத்தில் இழந்து விட்டோம் என்று கூறுவது சரியில்லை. Proper representation இல்லை. ஒவ்வொருவர் ஒவ்வொரு பக்கம் எதிர்த்தார்கள். அதனால் சரியான முறையில் Department இயங்கவில்லையே தவிர. வளர்ச்சி இல்லாமல் போய்விடவில்லை.

கேள்வி: சித்த மருத்துவ வளர்ச்சிக்கு தாங்கள் எவ்வகை திட்டங்களை மேற்கொள்ள இருக்கின்றீர்கள்.

அமைச்சர்: எனக்கென்ன ஆசை யென்றால், இந்த மூலிகைகளை நிறைய பயிரிட வேண்டும் மூலிகைத் தோட்டங்களை நிறைய வைத்து நமக்கு வேண்டிய மருந்துகளை, அவற்றிலிருந்து தயாரிப்பதுடன், வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்தால், நிறைய 'அந்நியச் செலாவணி கிடைக்கும் இப்பொழுது இருக்கும் Drawback என்னவென்றால், காண்ட்ராக்டர் மூலம் மூலிகைகள் வாங்கப்படுகின்றன. இதனால் பல சிக்கல்கள். ஒரு நேரத்தில் சப்ளை செய்கின்றனர். ஒரு நேரத்தில் கிடைக்க வில்லை என்று கூறிவிடுகின்றனர். அதனால் நமக்கு வேண்டிய எல்லா மூலிகைகளையும் நாமே பயிரிடவேண்டும். "அதற்காக, ஐந்து மாவட்டங்களில் ஐந்து பெரும் மூலிகைத் தோட்டங்களை அமைத்துத் தேவையான எல்லா மூலிகைகளையும் பயிரிட திட்டம் தீட்டி வருகின்றோம். மூலிகைத் தோட்டங்களை அமைப்பதன் மூலம், சித்த மருந்துகளை வேகமாகப் பரப்பலாம்" என்பது என் எண்ணம்.

கேள்வி: தற்போது பாளையங்கோட்டையில் உள்ள B. I M. கல்லூரி Remote-இல் இருப்பதால் வட மாவட்டங்களில் இருப்பவர்களுக்கு வாய்ப்பில்லாமல் போவதுடன், திருநெல்வேலி, இராமநாதபுர மாவட்டத்திலுள்ளோரே, இப்படிப்பினைப் பெற்று Dominated ஆக இருப்பதாக ஒரு கருத்துள்ளது. எனவே, அடுத்துவரும் ஆண்டுகளில், சென்னை, வடாற்காடு போன்ற மாவட்டத்திலுள்ளோர் படிப்பதற்கு வாய்ப்பாக-சென்னையில் ஒரு மருத்துவக் கல்லூரி ஆரம்பிப்பீர்களா?

அமைச்சர்: சென்னையில்தான் அமைக்கவேண்டும் என்பது ஏற்க முடியாது. சித்த மருத்துவர்கள் எல்லாம் சேர்ந்து, ஆசைப்பட்டால் நிதியுதவி செய்தால், திருச்சியில் ஒரு கல்லூரி ஆரம்பிக்கலாம்!

கேள்வி: உங்க சொந்த ஊர் என்பதால் திருச்சியைக் குறிப்பிடுகின்றீர்களா?

அமைச்சர்: திருச்சி என் சொந்த ஊர் என்பது வேறு விஷயம். மாநிலத்தின் மையமான பகுதி. சென்னையிலிருந்து 200 மைல் கன்னியா குமரியிலிருந்து 200 மைல் என்று, மாநிலத்தின் மையத்திலிருக்கின்றது. காவிரி பாய்வதால் தண்ணீர் பஞ்சமில்லை. மலைவளமிருப்பதால் மூலிகைகளுக்குப் பஞ்சமில்லை. நல்ல தமிழ் வளர்ந்த இடம். மேலும், சென்னை போன்ற நகரத்திலேயே எல்லாவற்றையும் அமைப்பது நல்லதல்ல. திருச்சியில் மூலிகைகள் நிறைய கிடைக்கின்றன. சித்தர்கள் வாழ்ந்த கொல்லிமலை போன்ற மலைகள் உள்ளன. இவற்றையெல்லாம் கருதிதான் திருச்சியில், சித்த மருத்துவக் கல்லூரி அமைக்கலாம் என்றேன்.

கேள்வி: திருச்சி மயமாகவே இருக்கின்றீர்களே! நான் எதற்கு சென்னையில் ஆரம்பிக்கலாம் என்று கூறினேன் என்றால், State Headquarter-மேலும், பல் வேறு முறைகளுக்கான மருத்துவக் கல்லூரிகள் உள்ளன. சித்த மருத்துவத்திற்கு என ஒரு கல்லூரி இல்லையே என்ற குறைக்காகவே, சென்னையில் ஆரம்பிக்கலாம் என்றேன்.

அமைச்சர்: நகரத்திலேயே எல்லாவற்றையும் அமைப்பது நல்ல சூழ்நிலை இல்லை. கிராமப்புற முன்னேற்றத்திற்கு ஏற்ப இந்த அரசு. திருச்சி போன்ற இடங்களைத்தான் தேர்ந்தெடுக்க விரும்புகிறது. கிராமப்புற மக்களுக்கும் வசதி செய்து தர வேண்டியது அரசின் கடமை.

கேள்வி: சென்னையில் அமைப்பதால், Research oriented ஆகவும், Modern side fecilites-களைப் பயன்படுத்திக் கொள்ளலாமே-என்ற கருத்தில்தான் நான் சென்னையில் அமைக்கலாம் என்கிறேன்.

அமைச்சர்: திருச்சியில் அமைத்தால், இந்த Fecilities கிடைக்காதா! இல்லையெனில் கிடைக்க வைப்போம்!

கேள்வி: சென்னையில் இருந்துகொண்டு திருச்சி மயமாகவே இருக்கின்றீர்கள். எப்படியோ இன்னுமொரு சித்த மருத்துவக் கல்லூரி ஏற்பட்டால் நல்லதுதானே.

அமைச்சர்: ஆர்வமுள்ள சித்த மருத்துவர்கள் உரிய நிதி வசதியை அளித்தால் இன்னுமொரு கல்லூரி ஏற்படுத்த அரசுக்குத் தடையில்லை.

கேள்வி : இந்திய மருத்துவ இயக்குனர் அலுவலகம் 1975இல், Mechanization of Pharmacy-க்காக, ரூ. 12 இலட்சம் அளவில் திட்டம் தீட்டி, அதற்கு மத்திய அரசு ரூ. 6 லட்சம் தருவதாகக் கூறியிருந்தது. இதுவரை அதனைப் பெறவில்லை என நினைக்கின்றேன், தாங்கள் அதனைப் பெற முயற்சி செய்வீர்களா?

அமைச்சர்: ஆமாம்! அது பற்றி கடிதப்போக்கு வரத்து நடைபெற்று வருகிறது. சித்த மருத்துவத்திற்காக மத்திய அரசுடன் சண்டைப் போட்டாவது நான் பெறுவேன். அதில் சந்தேகமே வேண்டாம்.

கேள்வி : நிறைய சண்டை போடுங்கள். நாங்கள் பின்னால் ஆதரவாக நிற்கின்றோம். முன்னேற்றத்திற்காக நீங்கள் போராடும் எந்த சண்டைக்கும் நாங்கள் பலமான ஆதரவு தருவோம். அடுத்து, அன்பழகன் அமைச்சராக இருந்தபோது, ஆண்டு தோறும், சித்த மருத்துவ நூல் வெளியீட்டிற்காக ரூ 50000 ஒதுக்கி, அந்தநூல்களை வெளியிட்டு வந்தார். கடந்த இரண்டு ஆண்டுகளாக இத்திட்டம் நிறைவேறவில்லை. அதற்கு ஆவன செய்வீர்களா?

அமைச்சர்: அந்தப் பைலை பார்த்திட்டுருக்கோம். மேற்கொண்டு பார்த்து ஆவன செய்யப்படும்.

கேள்வி : கடந்த அரசு ஆண்டுதோறும் 20 இலட்சத்திற்கு மேல் சித்த மருத்துவத்தின் வளர்ச்சிக்கு நிதி ஒதுக்கியது. ஆனால் கடந்த இரண்டு ஆண்டுகளாக, அந்த அளவு நிதி குறைக்கப்பட்டு விட்டதாகத் தெரிகிறது. இனிமேலாவது தங்கள் அரசு அதிக நிதி ஒதுக்குமா?

அமைச்சர்: சென்ற அரசு செய்ததைவிட அதிகமாக செய்வதற்கு இந்த அரசு திட்டங்கள் வைத்துள்ளது. நிச்சயமாகச் செய்யும்.

கேள்வி : மிகுந்த மகிழ்ச்சி! நன்றி! 1975இல் டாக்டர் கரண்சிங் National Institute for siddha-தொடங்குவதாகச் சொன்னார். ஆயுர்வேத, யூனானி, ஆகியவற்றிற்கு அத்தகைய நிலையங்கள் அமைக்கப்பட்டுவிட்டன. திட்டம் அறிவிக்கப்பட்டு மூன்றாண்டுகளாகியும், சென்னையில் தொடங்கப்படவில்லை. அதற்கு என்ன முயற்சி எடுக்கப் போகிறீர்கள்?

அமைச்சர்: மத்திய அரசின் சுகாதார அமைச்சருடன் கலந்து பேசி உரிய நடவடிக்கை எடுக்கப்படும்.

கேள்வி: மத்திய அரசு, ஆயுர்வேதத்துடன் சித்த வைத்தியத்தை இணைத்துவிட முயற்சிக்கின்றார்களே. இதற்கு என்ன செய்யப்போகிறீர்கள்.

அமைச்சர்: மத்தியில் உள்ளவர்கள், இரண்டு வைத்திய முறைகளும் ஒரேமூலிகையைத்தான் பயன்படுத்துகின்றார்கள். எனவே சித்த முறைக்கு தனிப்பிரிவு தேவையில்லை என நினைக்கின்றார்கள் அதனால் நமக்குப் பாதிப்பு ஏற்படும் என்று நினைக்கவில்லை. நமக்குத் தேவையானதை நிச்சயமாக நாம் பெறலாம். நாம் உரிய முறையில் தனிப் பிரிவு என்பதை Proper ஆக represent செய்யத் தவறியதால்தான் இந்தநிலை. மூலிகைகளைப் பயன்படுத்துவதில் இரண்டு முறைக்கும் பொது அம்சம் இருந்தாலும், செய்முறையில் உள்ள வேறுபாட்டைச் சுட்டிக்காட்டி தனிப் பிரிவாக மாற்றியிருக்க வேண்டும். மேலும் அவர்கள், இந்த முறை வளரவில்லை எனவே தனிப்பிரிவு தேவையில்லை என்று கருதுகிறார்கள். 'வளர்ந்துவிட்டோம்' என்பதை proper ஆக represent செய்தால், தனிப்பிரிவாக அமைப்பதில் தடையிருக்காது. நான் உரிய முறையில் அதற்காக represent ஆகி தனிப்பிரிவாக அமைக்க முயல்வேன். இணைப்பாக இருப்பதால் நமக்குரியதை இழந்துவிட்டோம் என்றாகாது.

கேள்வி: அடுத்து அரும்பாக்கத்தில் உள்ள Central Research Institute-என்ற ஆராய்ச்சிப் பிரிவில் புற்றுநோய் பற்றி ஆராய்ச்சி நடந்து வருகிறது. கடந்த ஆண்டுகளில், அந்த Institute-க்கு சரியான மருத்துவ இயக்குனர் இல்லாததால், சரியாக இயங்கவில்லை. தற்போது ஒரு Non-Medical Man, இயக்குவதால், போதிய வளர்ச்சி இன்றி இருக்கிறது. அதனை வழி முறைப் படுத்துவீர்களா?

அமைச்சர்: அதுபற்றி என் கவனத்துக்குக் கொண்டு வந்தார்கள். பரிசீலனையில் உள்ளது.

கேள்வி: Drugs Control-Act-ஐ, Modern side-இல் ஒதுக்கியதால் சில சிக்கல்கள் ஏற்பட்டு வருகிறது. அதனை இந்திய மருத்துவத் துறையுடன் இணைக்க முயற்சிப்பீர்களா?

அமைச்சர்: It is under consideration.

கேள்வி: இந்த 'B' Class registration-ஐ மேலும் சில ஆண்டுகட்கு Extend செய்ய திட்டம் உள்ளதா?

அமைச்சர்: 'B' Class registration-பரிசீலனையில் உள்ளது. Extend செய்ய வேண்டும் என்பதுதான் என் எண்ணம்கூட. அதற்கு,

மூன்று மலைப்பகுதிகளில், மூன்று சித்த வைத்திய மாநாடு நடத்தி, தமிழக சித்த மருத்துவர்களைக் கூட்டி அவர்கள் கருத்துக்களையெல்லாம் அறிந்து செயல்பட திட்டமிட்டுள்ளேன். கொஞ்சம் நாளானாலும்கூட, இப்படிச் செய்வதால் நாட்டுக்கு நன்மை ஏற்படும் என்று நினைக்கின்றேன். நான் செய்கின்றேனோ இல்லையோ, நம் தமிழக முதல்வர் – புரட்சித் தலைவர் எம்.ஜி ஆர். அவர்கள் தம் ஆட்சிக் காலத்தில் சித்த மருத்துவத்திற்கு நிறைய செய்யவேண்டும்.

---

கேள்வி: மிக்க நன்றி! எங்கள் 'மூலிகைமணி' வாசகர்களுக்குச் சிறப்புச் செய்தி ஏதேனும் உண்டா?



அமைச்சர்: மூலிகை மணி! 14 வருடமாக வரும் நல்ல பத்திரிக்கை! நாட்டுக்குத் தேவையான அருமையான பத்திரிக்கை! வெறும் மூலிகைகளை மட்டும் எழுதாமல், பெண்கள் படிக்கக்கூடிய வகையில், துளசி, ஆடாதோடை, வேப்பிலை போன்றவற்றை எப்படியெல்லாம் பயன் படுத்தலாம் என்ற பகுதிகளையெல்லாம் வெளியிட்டால் மேலும் பலர் விரும்புவார்கள். மதிப்பும் தேவையும் மக்களால் உணரப்படும். 'மூலிகை மணி' ஒரே இடத்தில் ஒலிப்பதைவிட ஒவ்வொருவர் வீட்டிலும் அந்த மணி ஒலித்தால், சித்த மருத்துவத்தின் வெற்றி எனும் மணி வெகு சீக்கிரத்தில் ஒலிக்கும்.

கேள்வி: நீங்கள் கூறியதுபோல், மூலிகை மணி ஒவ்வொரு இல்லங்களிலும் ஒலிக்க மேலும் பல திட்டங்கள் உள்ளன. காகிதப் பஞ்சம் காரணமாக தடைப்பட்டுள்ளன. முதல்வர்கூட, பட்ஜெட்டில், மூலிகைகளைப் பற்றி வெளியிடும் நூல்களுக்கு அரசு, தக்க உதவி செய்யும் என்று அறிவித்துள்ளார். மூலிகை மணிக்கு அவ்வகையில் தற்போதுள்ள காகிதப் பஞ்சம் தீர அரசு உதவி செய்தால் நலமாயிருக்கும்.

அமைச்சர்: இன்ன வகையில் உதவி தேவை என்று திட்டமிட்டு Department'ஐ அணுகினால் தக்கஉதவிஅளிக்கப்படும். மேலும் ஒன்று சொல்ல விரும்புகிறேன். மூலிகைகள், சித்த மருத்துவம் பற்றி ஆங்கிலத்தில் கட்டுரைகள் எழுதி ஆங்கில இதழ்களில் வெளியிட்டால் மேலும் பரவ வாய்ப்புண்டு உங்களால் முடியும். அதனையும் நீங்கள் செய்யவேண்டும்.

கேள்வி: நிச்சயம் செய்வேன்! இது தொடர்பாக என்னுடைய திட்டம் ஒன்று உண்டு. நீங்கள் கூறிய ஆலோசனையின் அடிப்படையில் ஆங்கிலத்தில் காலாண்டு இதழ் ஒன்று நடத்த திட்டமிட்டுள்ளேன். அதில் உங்கள் ஆலோசனை முழு வடிவம் பெறும். இறுதியாக ஒரு வேண்டுகோள் சித்த மருத்துவம் தொடர்பான எந்தப் பிரச்னையிலும் நீங்கள், சொந்த ஆர்வமுடன் செயல்பட வேண்டும். அப்படிப்பட்ட ஆர்வம், தற்போது மிகவும் தேவைப்படுகிறது.

அமைச்சர்: நிச்சயம் செயல்படுவேன். முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில், அவர் நல்லாசியுடன் நல்ல திட்டங்களைச் சித்த மருத்துவ வளர்ச்சிக்காகச் செயல்படுத்துவேன்,

**(ஒலிப்பதிவில் பதிவாகிய அமைச்சரின் சிறப்புப் பேட்டி இத்துடன் முடிகிறது )**

டேப் ரிகார்டரின் ஒலி அடங்கியது. புகைவண்டியின் 'தடக் தடக்' அதிகமாகி வருகிறது. ஆமாம்: புகைவண்டி 'விழுப்புரம்' நிலயத்தினை நெருங்கிக் கொண்டிருந்தது. ஏறக்குறைய 1 மணி நேரம் சுவாரசியமாக பேட்டியை அளித்த அமைச்சர் சாப்பிட தயாரானர். (இரவு 11 மணி)

"என்ன நண்பரே! நீங்களும் சாப்பிடுங்களேன்!" என்ருர்.

"நன்றி! சாப்பிட்டு விட்டுத்தான் புறப்பட்டேன்" என்று கூறி, பேட்டி சிறப்பாக அமைந்த திருப்தியுடன் விடை பெற்றேன்.



புகைவண்டி விழுப்புரத்தில் நின்றது. அமைச்சரிடமிருந்து விடை பெற்று, விழுப்புரத்ல் இறங்கி, அங்கிருந்த, எக்ஸ்பிரஸ் பஸ் மூலம் விடியல் 3 மணிக்கு சென்னை வந்து சேர்ந்தேன். பஸ்சில் பயணம் செய்தபோது, அமைச்சரின் பேட்டிக் கருத்துக்கள் எதிரொலித்தன. அந்த எதிரொலியின் முழு வடிவமே "முதல்வர், சாதாரண ஒருவரை நலத்துறைக்கு அளிச்சுவில்லை. சித்த மருத்துவத்தில் அறிவு, அனுபவம்,பற்று ஆகியன கொண்டுள்ள ஒருவரையே நியமித்துள்ளார்" என்பதை உணர்ந்தேன். "அமைச்சர் சௌந்தரராசன்-முதல்வர் அளித்த நல்முத்து" என்பதை இப்பேட்டிக் கட்டுரை உறுதிப்படுத்துகிறதல்லவா?

## நன்றி !

அமைச்சரின் இந்தச் சிறப்புப் பேட்டி சிறப்புற அமையவும், புகைப் படம் எடுக்கவும் உதவிய, நலத்துறை அமைச்சக அலுவலர்கள் திரு. சுந்தரம், திரு. இருங்கோவேள் மற்றும் அமைச்சரின் உதவியாளர் திரு. சச்சிதானந்தம் ஆகியோர்க்கு இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அமைச்சரைப் பேட்டி காணுமாறு பணித்த, மூலிகை மணி ஆசிரியருக்கும், சிறப்புற பேட்டியளித்த அமைச்சருக்கும் இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

— க. வேங்கடேசன்





முதல்வர் அளித்த நல்முத்து




# கடுகு

## (BRASSICA NIGRA)

## 221-வது மூலிகை

கடுகைத் தெரியாத தமிழ்நாட்டினர் அரிது எனலாம். பண்டைக்கால முதல் நம் நாட்டில் கடுகு – அவ்வளவு பிரசித்தமான அடுப்படி சரக்கு. வீட்டு சமையலில் கடுகு இல்லாவிட்டால் சமையல் ருசிக்காது. பசிக்காது. கடுகு தாளிதம் இல்லாத வீடு சமையல் மணக்காது. சாப்பாடு ருசிக்காது. ஜீரணம் அரைகுறையாகவே இருக்கும்.

கடுகு தாளிதம் செய்வதால் சமையல் காய்கறிகள் அனைத்தும் ஜீரண பக்குவமடைவதுடன் சாப்பிடுவதற்கு ருசியும் நறுமண வாசனையும் வீசி வாய்க்கு அறுசுவையளித்து ஜீரண நீர்களை நன்கு சுரப்பிக்கச் செய்து செரிப்புண்டாக்குகிறது.

சில நாடுகளில் கடுகெண்ணெயை சமையலுடன் சேர்க்கின்றனர். ஆனால் நமது தமிழ் நாட்டில் கடுகைத்தான் தாளிப்பார்கள். இது சங்க கால முதலே இருந்தது என்பதற்கு சங்கப் பாடல்கள் சான்று கூறுகின்றன. உணவு பழக்க வழக்கங்களில் எதுஎதுமுக்கியமோ அவைகளை எல்லாம் பரம்பரை பரம்பரையாகப் பழக்கத்திற்கு உள்ளாக்கி விட்டனர், நமது முன்னோர்கள். இப்படித்தான் வெகுகாலத்துக்கு முன்பே சமையலில் கடுகு தாளிதம் பழக்கத்துக்குள்ளானது.

கடுகைப் பற்றி பலவித பழமொழிகள் நம் தமிழகத்தில் உண்டு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு திருவள்ளுவர் எழுதிய திருக்குறளுக்கு சிறப்புரை எழுதியவர், கடுகைத் துளைத்து ஏழு கடலையும் புகுத்தியது குறள் என்கிறார். சித்த மருத்துவர்கள் மிகஉயரிய மருந்துகளுக்கு கடுகு பிரமாணம் என்றுதான் கூறுவர். மனித வாழ்க்கைக்குக் கடுகு முக்கியமாக அமைந்துள்ளது. ''கடுகு சிறுத்தாலும் காரம் போகுமா?'' என்பது ஒரு பழமொழி. எவ்வளவு நாள்பட்ட நோயானாலும் அதற்கு

பத்தியம் வைப்பதுண்டு. அதில் முதல் வார்த்தை. கடுகு, கடலை எண்ணை தாளிதம் கூடாது என்பர். அது அனைத்து மருந்துகளையும் முறித்து விடுமாம்! அதனுல் மருந்துண்ணும் காலத்து நெய், சீரகம், வெங்காயம் தாளிதம் செய்ய பத்தியம் வைத்துவிடுவர். நாள்பட்ட நோய்களும் குறைவின்றி உடலை விட்டொழியும். உணவில் கடுகைப் போன்ற காட்டமான ஒரு பொருள் கிடையாது.

கடுகு, செடி இனமாகும். இதில் கருங்கடுகு இதுவே செங்கடுகு என இரண்டு வகை உண்டு. காரமும், கைப்பும் உடையது. குணம் ஒன்றே. இதன் வேறு பெயர் ஐயவி என்பார்கள். இஃதன்றி நாய்கடுகு, மலைக்கடுகு, சிறுங்கடுகு என்ற சாதிகளும், வெள்ளை ரக கடுகு அல்லது வெண்கடுகு என்றும் கூறுவார்கள்.

## வெண்கடுகு

வெண்கடுகு ஓர் அற்புத மாந்திரீக மூலிகை! பிரசவித்த மாதர்கள் இருக்கும் அறையின் வாயிற்படி மேலும் தூவுவார்கள். அல்லா மலும் வாயிற்புறத்தின் மேல் ஒரு மெல்லிய துணியில் மூட்டையாகக் கட்டி வைப்பார்கள். இதனுல் பிறந்த சிசுக்களுக்கு பூத, பைசாச, காற்று-கறுப்பு இவைகள் வராமல் தடுத்துவிடுமாம். இது பண்டைய முறைகளில் ஒன்று,

பாலக்கிரகப் பூதப் பைசாச மோட்டிவிடும்
ஆல விழக் கடிகளாற்றுங்காண் – கோலமிகு
வள்ளச் செவிமாதே! மாபங்க நோய் விலக்கும்,
வெள்ளைக் கடுகின் விதி

(அகத்தியர் குணவாகடம்)

### பொதுக்குணம்

குழந்தைகளுக்குண்டாகும் தோடங்கள், பூதம் பைசாச தோடம், கடி விஷங்களின் குற்றம், முடக்கு வாத ரோகங்கள் ஆகியவை நீங்கும் என்பதாம்.

அளவு: 10 முதல் 20 உழுந்து நிறை

இதை அளவுடன் கொடுக்க மந்தம் நீங்கி ஜீரண சக்தியை உண் டாக்கும். வாயுவைக் கண்டிக்கும். சூட்டை உண்டாக்கும்.

1 முதல் 4 வராகனிடை அறைத்து தண்ணீரில் கலந்து கொடுக்க ஆயாசம், வாய்க்குமட்டலின்றி, வாந்தியாகும். இதனுல் உட்சென்ற நஞ்சுப் பதார்த்தம் வெளியாகும்.

கடுகை அறைத்து, கெண்டை சதைகளில் துணியிற்றடவி போட சுரவேகத்தினுலுண்டாகும் மயக்க தோடங்கள் நீங்கும்

தொண்டை, மார்பு முதலிய இடங்களில் தடவ, அந்த இடங்களில் உண்டாகும் நோய் வலிகளைத் தணிக்கும்.

மார்புக் குழியில் சீலையில் தடவிப் போட விக்கல் தணியும்.

சந்து வாதம், கீல் வாதம், இரத்தம் கட்டிக் கொண்ட இடம் இவைகளுக்கு, மேலுக்குத்தடவ நன்மை தரும்.

தேனில் அறைத்துக் கொடுத்தால் விரைவாதத்தில் உண்டான சுவாசம் இருமல் இவை தீரும்.

அடுத்தடுத்துக் கொடுத்தால் மூத்திரத்தை அதிகப்படுத்தும், தலையிலும் மூளையிலும் உள்ள தோடங்களை போக்கும்.

## கருங்கடுகு குணம்

பைத்தியம், காணுக்கடி, வாதகபம், குடைச்சல், மூடம், அக்கினி மாந்தம், வாத தோடம, குழம்பிய உமிழ் நீர், கிராணி, வயிற்றுவலி, திரி தோடம் இவைகளை விலக்கும். சுகப் பிரசவத்தை தரும், மேலும் வாத சீதக் கடுப்பு, சந்து வாதம், கீல்வாதம், அஜீரணம், தலைசுற்றல், விக்கல் இவைகளைப் போக்கும். சிறுநீரைப் பெருக்கும். வாந்தியை உண்டு பண்ணும், தலையிடியைத் தரக்கூடிய இருமல், பீனிசம் கோழை கபம் போக்கும்.

## கடுகு உக்களி

கடுகுத்தூள் அரிசிமா இவைகளை சமவெடையெடுத்துப் போதுமான நீரிலிட்டுக் களிபோற் கிளறி துணியிற்றடவி, வயிற்றுவலி, குடைச்சல் வாதரோகம் இவைகட்கு அந்தந்த நோயுள்ள இடங்களிலும் இருமல் இரைப்பு இவைகட்கு மார்பின் மீதும் தலைவலி, உன்மத்தம் இவைகட்கு பிடரியின் மேலும் சீதம், சந்நிபாதம், வாந்தி பேதியிற் காணும் கெண்டைச் சதைப் பிடிப்பு இவைகட்குக் கால் கெண்டைச் சதையின் மேலும் போடக் குணமாகும்.

## கடுகு தைலம்

இது அற்ப மஞ்சள் நிறமும், நெடியும் விறுவிறுப்பும் சுவைக்கில் எரிச்சலைத் தருதலும், சருமத்திற் படக் கொப்புளிக்கும் தன்மையும் பொருந்தியிருக்கும்.

இதை வாத நோய்களுக்கும் கிரந்திகளுக்கும் மேலுக்குப் பூசலாம்.

செய்முறை: கடுகை இடித்துச் சிறிது கற்கண்டு சேர்த்து வெந்நீர் கூட்டி நெருக்கிப் பிழிந்தாவது, நீரிற் சேர்த்து காய்ச்சி நீரின் மீது எண்ணெய் படிந்துவரும் போதாவது, எண்ணெய் எடுப்பது நாட்டு வழக்கம்

## கடுகு கஷாயம்

கடுகுத்தூள் வராகனெடை 2, வெந்நீர் 1 ஆழாக்கு எடுத்து அதில் கடுகை ஊற வைத்து கொடுக்க விக்கல் நீங்கும். இது விக்கலை போக்குவதற்கு சிறந்தது. உணவாகவும், மருந்தாகவும் பயன்படும் ‘நம் நாட்டு மூலிகை’ வரிசையில் ‘கடுகு’க்குச் சிறப்பான இடம் உண்டு.

---

அட்டைப் படத்தில் பச்சை நிறத்தில் காண்பது கருங்கடுகு பின்னணியில் கறுப்பு வெள்ளை நிறத்தில் காண்பது வெண்கடுகு ஆகும்.



# துணைவேந்தர் ஜி. ஆர். டி. அவர்கட்கு வாழ்த்துக்கள்



சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராகப் புகழ்பெற்ற தொழில் வல்லுநர், கல்விப் பணி ஆய்வாளர் அறக்கொடை அருளாளர், கலைக் கதிர் ஆசிரியர், **ஜி. ஆர். தாமோதரன்** அவர்கள் நியமனம் பெற்றது குறித்து, அவருக்கு 'மூலிகை மணி' நல்வாழ்த்துக்களை நெஞ்சாரத் தெரிவித்துக் கொள்கின்றது. செந்தமிழ்ப் பற்றுக் காரணமாக, 'கலைக்கதிர்' இதழினைத் துவக்கி, அறிவியல் கல்வியை அன்னைத் தமிழில் புகட்டும் ஆர்வத்திற்கு — முயற்சிக்கு 'கலைக்கதிர்' மூலமாக வித்திட்ட வித்தகரான ஜி. ஆர். டி. இப்பதவியை ஏற்பது சாலச் சிறப்புடையது.

சித்தமருத்துவம், மூலிகைகள், பற்றிய ஆய்வுக்கட்டுரைகளைக் 'கலைக்கதிரில்' வெளியிட்டு நாட்டு மருத்துவ வளர்ச்சிக்கு நல்லாதரவு நல்கி வரும் ஜி. ஆர். டி. அவர்கள் தமிழ்க் கலைகளான சிற்பம், ஓவியம், மருத்துவம் மீது மிகுந்த ஆர்வம் உடையவர். அவர் தம் பதவிக் காலத்திலாவது, சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'சித்த மருத்துவக் கல்வி' புதிய எழுச்சி பெற வேண்டும்! அதற்கான முயற்சிகளை அவர் ஊக்குவிப்பார் என நம்புகிறோம். குறிப்பாக மதுரைப் பல்கலைக்கழகத்தில் உள்ளது போல், B.I.M. கல்லூரி ஒன்று, சென்னையில் அமைத்திடவும், சித்தர் நூல்கள், இலக்கியம், சித்த மருத்துவ மூலிகைகள் போன்ற ஆராய்ச்சிகளுக்குச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் உள்ள பல்வேறு துறைகள் வழி, ஆக்கபூர்வமான திட்டங்களை நடைமுறைப்படுத்தி சித்த மருத்துவம் செழிக்க வழிகாட்டுமாறு 'மூலிகை மணி' துணைவேந்தர் ஜி. ஆர். தாமோதரன் அவர்களை வேண்டிக் கொள்கின்றது.

# பெண்கள் பகுதி:

## மழைக்கால நோய்கள் வராமலிருக்க...

மழைக் காலம் தொடங்கிவிட்டது. இனி குழந்தைகள் ஒன்று மாற்றி ஒன்று காய்ச்சல், இருமல் என்று நோய் வயப்பட்டு தொல்லைப் படுத்தும். இம் மாதிரியான சீசன்களில், வீட்டில் உள்ள தாய்மார்கள் உணவு முறையின் மூலமாகவே சில மூலிகைகளைப் பயன்படுத்தி குழந்தைகட்கு உணவாக அளித்துவர, குழந்தைகள் நலன் பெறுவதுடன், மாதா மாதம் டாக்டர் பில்லும் வராமல் தடுக்கலாமல்லவா ? சில குறிப்புகளை ஈண்டு காணலாம் !

ஃ வீட்டை எப்போதும் சொத, சொத என்று ஈரமாக வைக்காமல், காய விடுங்கள். இதனால், குழந்தைகள், ஈரத்தில் நடமாடாமல் தடுக்கலாம்,

ஃ மழைக் காலத்தில் அன்றாடம், உணவில், புதினா, இஞ்சி, தூதுவளை, முசுமுசுக்கை, கற்பூரவல்லி, சிறுகீரை, அரைக்கீரை, போன்றவற்றில் ஏதாவதொன்றை துவையல், கடையல், போன்றவைகளாகச் செய்து கொடுங்கள்.

ஃ திறந்த உடம்பாக குழந்தைகளை விட்டுவிடாதீர்கள்.

ஃ சாம்பிராணி புகை—நொச்சி, மாம்பூ மருதாணி காய் ஆகியவற்றைப் பொடித்த தூளைக் கொண்டு நெருப்பில் புகையூட்டி வீடெங்கும் காட்டிவர, கொசு போன்ற மலேரியாக் காய்ச்சல் கிருமிகளை ஒழிக்கலாம்.

ஃ வாரம் இரண்டு மூன்று நாட்கள், அருகம்புல், மிளகு, சீரகம் இவற்றை கஷாயம் செய்து பால் கலந்து 'சுக்கு காபி' போல் பருகக் கொடுங்கள், இதனால் தொற்று நொய்கள் வராது.

ஃ சுக்கு காபி, கொத்துமல்லி காபி, போன்றவற்றை மாலை வேளைகளில் பருகக் கொடுத்தால் சளித் தொல்லை சேராது.

ஃ இரவில் குளிர் அதிகமாக இருந்தால், கைகால், கழுத்துப்புறம் சில்லிட்டு இருக்கும். அப்போது, தேங்காய் எண்ணெய் 30 மில்லி எடுத்து அதில் 1 கிராம் கற்பூரத்தைக் கரைத்து சிறிது சூடு செய்து, சில்லிட்ட பகுதிகளில் தேய்த்துவர, உஷ்ணம் பரவி, குளிர் வராது; சன்னிக் காய்ச்சல், இழுப்பு போன்றவை வராது. —'விமல்'

# நோயும் மருந்தும்

## வாசகர்கள் கேள்வியும்—ஆசிரியர் பதிலும்

[வாசகர்கள் கேட்கும் நோய் தொடர்பான வினுக்களுக்கு ஆசிரியர் கண்ணப்பர் எளிய மூலிகை சிகிட்சை முறைகளைக் கூறுகின்ருர். ஏற்கனவே வெளிவந்த 'கேள்வி—பதில்கள்' தொகுக்கப்பட்டு 'நோயும்-மருந்தும்' எனும் தலைப்பில் புத்தக மாக வெளியிடப்பட்டுள்ளது 300க்கும் அதிகமான நோய் களுக்கு எளிமையான-விளக்கமான பதில்கள் இந்நூலில் இருப் பதை அறியலாம். பலரும் படித்துப் பயன் பெற்று வருகின் றனர். இந்நூல் வீட்டிலிருந்தால், டாக்டர் ஒருவர் வீட்டிலிருப் பதற்குச் சமம். ரூ. 8/- மட்டும் M.O. மூலம் ''மூலிகை மணி' 19, அருளாம்பாள் தெரு, தி. நகர், சென்னை-17'' எனும் முகவரிக்கு M. O. அனுப்புங்கள். உடன் எமது செலவில் புத்தகங்களை அனுப்புகிருேம்.]

**கேள்வி: சோற்றை வடித்துச் சாப்பிடுவது நல்லதா? அல்லது 'குக்கரில்' பொங்கிச் சாப்பிடுவது நல்லதா?**

பதில்: வடித்துச் சாப்பிடுவது நல்லது. பொங்கிச் சாப்பிடுவதில், அரிசி சோற்றின் எண்ணெய்ச் சத்து வெளியேருது. வடித்துச் சாப் பிடும்போது, எண்ணெய்ச் சத்து நீங்கிவிடும். அவ்வாறே உப்பு, புளி, மிளகாய் போன்றவற்றையும் சுட்டுப்பின் உணவில் சமைத்துண்ணவும்.

**கே: தியானம் செய்தற்குகந்த நேரம் எது? எவ்வளவு நேரம் செய்யலாம்? என்ன பயன்?**

ப: விடியற்காலை 4 மணிக்கு எழுந்து, நீராடி—நீருடி (திருநீறு பூசி) தூய்மையான மன உணர்வோடு 1 மணி நேரம் தியானம் செய்ய லாம். மாலையில் அவ்வாறே 6 மணிக்கு தியானம் செய்யலாம். தியானம் செய்வதால் மூளையின் இயக்கம் சீர்பட்டு, இரத்த ஓட்டம் நன்னிலையில் இருக்கும். பிளட்பிரஷர், போன்ற நோய்கள் அணுகாது.

**கே: இல்லறத்தில் ஈடுபட்டிருக்கும் நம் போன்ருேர்க்கு, எளிய கல்பமுறைகள் உள்ளனவா? அதனை எப்படிப் பின் பற்றலாம்? பலன் யாது?**

ப : வள்ளல் பெருமானின் வழி, இல்லறத்திலுள்ளவர்க்கு இனிய வழியாகும். காலையில் வெறும் வயிற்றில் பல் துலக்கியபின் தூதுவளை, பொன்னாங்கண்ணி, வில்வம், சீந்தில், கரிசலாங்கண்ணி, புளியாரை, வல்லாரை, நன்னாரி, கடுக்காய், மிளகு அறுகம்புல் ஆகியவற்றில் ஒன்றைப் பசும்பாலில் வேகவைத்து வடி கட்டி அதில் சர்க்கரை கலந்து பருகிவந்தால் போதும் நோயற்ற வாழ்வில் வாழலாம். குறைந்தபட்சம், இதயம், ஈரல், நுரையிரல், மூளை போன்ற உறுப்புக்களின் வலிமைக்கு இவை பெரிதும் உதவும். உரமான உடலைப் பெறலாம் நோய்த் தடுப்பாற்றல் பெற்று ஆரோக்கிய வாழ்வு நடத்தலாம். நம்பிக்கையும் — விடா முயற்சியும்தான் தேவை. இதுவே நமக்குகந்த கற்பம்.










கே : நான் ஒரு நாளைக்கு இரண்டு பாக்கெட் சிகரெட் பிடிக்கின்றேன். அதனால் தீமை என்று தெரிந்தும் விட முடிய

**வில்லை. இப்படியே தொடர்ந்தால் என்ன வியாதி வரும்? அதனைத் தடுக்க மூலிகை சிகிட்சை உளதா? இருந்தால் கூறுங்களேன்!**

ப: நஞ்சு என்று தெரிந்தும்—அதனைச் சாப்பிட ஆசைபட்டு: அதற்கு முறிவு கேட்டால் என்னென்பது! Slow Poison என்பார்களே, அது சிகரெட்டுக்கு முழுமையாகப் பொருந்தும். சிகரெட்டில் உள்ள புகையிலை புகையால் ஏற்படும், 'நிகொடின்' என்ற நச்சுப் பொருள் சேர்ந்து, இரத்தத்தின் பிசுபிசுப்புத் தன்மையை அதிகப்படுத்தி. இரத்த ஓட்டத்தைத் தடைப்படுத்துகிறது. இதனால் இதயம் கடுமையாகப் பாதிக்கப்படுகிறது. இதய வலியும் இதயப் புற்று, நுரையீரல் புற்று போன்ற நோய்கள் ஏற்படுகிறதாக ரஷ்யநாட்டு விஞ்ஞானிகள் கூறியுள்ளனர். எனவே, உடனடியாக சிகரெட் பிடிப்பதை நிறுத்திவிட்டு, அதனால் சேர்ந்த நஞ்சினை முறிக்க, தினம் 1 பச்சை வெங்காயம், காரட், சாப்பிடுங்கள். வாரம் 1 முறை அகத்திக் கீரை, சிறு கீரை ஆகியவற்றை உணவில் சமைத்துண்ணுங்கள், சிகரெட் நஞ்சு முறிந்து பல தீவிர நோய்களை வராமல் தடுக்கலாம்.

**கே: உடம்பின்மேல் தேமல் உள்ளது. இதனைப் போக்க எளிய சிகிச்சை கூறவும்.**

ப: பூவரசங்காய் ஒன்று எடுத்துஉடைத்தால் மஞ்சளாகத் திரவம் வரும். அதனைக்குளிக்கும் முன் தேமல்மீது பூசி வாருங்கள். கருஞ்சீரகத்தை வல்லாரை இலைச் சாற்றில் அரைத்து இரவில் பற்று போட்டு காலையில் பாசிப்பயறு அல்லது ஆவாரம்பூ கலந்த சீயக்காய் தேய்த்து குளியுங்கள். உள்ளுக்கு, திப்பிலியை இளஞ்சூட்டில் வறுத்து பொடித்து இரண்டு சிட்டிகைஎடுத்து தேன்குழைத்து 20 நாட்கள் சாப்பிடுங்கள். முற்றிலும் குணமாகும்.


புவி அரசன்

**கே: வயிற்றில் அடிக்கடி எரிச்சலும், கடுப்பும் தோன்றுகிறது? இதற்கு என்ன செய்யலாம்?**

ப: கருப்பஞ்சாறு தெரியுமா? அதில் 1 குவளை எடுத்து ¼ டீஸ்பூன் சுக்கு பொடி செய்து கலந்து பருகுங்கள். 5 நாட்கள் செய்துவர, வயிற்று எரிச்சல், கடுப்பு ஆகியன தீரும்.

**கே: கிச்சிலி ஊறுகாய் அடிக்கடி சாப்பிடலாமா?**

ப: வயிற்றுக் கோளாறுகளான அஜீரணம், வாந்தி, பசியின்மை, ருசியின்மை ஆகியன இருப்பவர்கள், கிச்சிலி ஊறுகாய் சாப்பிடலாம். பிளட்பிரஷர் போன்ற நோயுடையவர்கள் சாப்பிடக் கூடாது,

**கே: ஆட்டுப்பாலில் என்ன வகை ஆட்டுப்பால் நல்லது?**

ப: பொதுவாக 'ஆட்டுப்பால்' உடலுக்கு 'டானிக்' போன்று வலிமை தரக்கூடியது. செம்மறியாட்டுப்பால் பொதுவாக 'டானிக்' போன்றது. நீடித்த நோயாளிகளுக்கு வெள்ளாட்டின் பால் நல்லது! நோய்த் தடுப்பாற்றலை இது அளிக்கிறது.

---

**கே: அத்திக் காயினை சமைத்துண்பதால் என்னபயன்?**

ப: இவை போன்ற பல்வேறு காய்கறிகளின் பயனை அறிய விரைவில் ஒருபுத்தகம் வெளியிட இருக்கின்றோம். அதுவும் இலவசமாக வினியோகிக்கப் போகிறோம். ஆம்! வருகின்ற கார்த்திகை இதழ் மூலிகைமணிக்கு 15-வது ஆண்டு இதழாக வெளியிடப்பட உள்ளது. மூலிகை மணிக்கு இரண்டாண்டு சந்தா ரு. 18 செலுத்துபவர்கள். 'காய்கறிகளின் பயன்' எனும் நூலினை இலவசமாகப் பெறலாம். எனவே சந்தா செலுத்தி, அந்த நூலை இலவசமாகப் பெற்று, அதில் அத்திக் காயின் பயனைப் படித்துப் பாருங்கள், அதுவரை 'சஸ்பென்ஸ்'!

---

**கே: தவசி என்றொரு மூலிகை உள்ளதா? அதன் மருத்துவ குணம் என்ன?**

ப: 'தவசு முருங்கை' எனும் சிறு மர வகுப்பைச் சார்ந்த மூலிகையின் பெயர்தான் 'தவசி' என்று சுருங்கி விட்டது! ராஜகோபால் என்ற பெயர், ராஜ் என்று சுருங்கிவிட்டதல்லவா! அதுபோல் தவசு முருங்கை 'தவசி' என்றுகிவிட்டது. இந்த மூலிகை நஞ்சுகளை முறிக்கும் ஆற்றல் உடையது. உங்க வீட்டு எலி கடித்துவிட்டால், இந்த 'தவசி'யின் கொழுந்தை அரைத்து தயிரில் கலந்து 1 அவுன்ஸ் வீதம் மூன்று நாட்கள் உண்டு வர எலிக்கடி நஞ்சு முறியும்.

**கே: அந்தக் காலத்தில் மலைவாசிகள் தினைமாவை உண்டு வந்ததாகத் தெரிகிறது. இதனால் நன்மை உண்டா? நாமும் உண்ணலாமா?**

ப: முருகனுக்கு வள்ளி கொடுத்த உணவு ஐயா இது! உண்ண லாமா? என்று சந்தேகம் கேட்கின்றீரே! தாராளமாக உண்ணலாம். 'தேனும், தினைமாவும்' என்ற உணவுத் தொடரே உள்ளதே. தினை மாவை தேனுடன் காலை உணவாக உண்டு வந்தால், கொழுக்க வளர லாம். அந்தக் காலத்து தேனும் தினைமாவில் உள்ள வலிமை, இன்றைய பரோட்டா, செட் தோசை, பிசிபேளா பாத், சோளாபட்டூராவில் எங்கே உள்ளது?

**கே: ஆஸ்துமாவிற்குப் பவளபற்பம் நல்லது எனக் கூறு கிறார்கள்? இதனைச் செய்யும் பக்குவ முறையையும் பயன்படுத் தும் வகையையும் கூறுங்களேன்!**

ப: நல் பவளம் 100 கிராம் வாங்கி தூய்மை செய்து வெள்ளருக்கம் பால், நுணா இலை, ஆகியவற்றினைக் கொண்டு அரைத்து வில்லை தட்டி காயவைத்து அதற்கு கொன்றை மரப் பூவை கரைத்துக் கவசம் செய்ய வும், பின்னர் ஓட்டில் வைத்து சீலை செய்து 30 வறட்டி கொண்டு புடமிடப் பற்பமாகும்.

இதனை இரண்டு முதல் நான்கு சிட்டிகை எடுத்து தாளிசாதி சூரணம் அல்லது கற்பகமிளகுப் பொடி 5 சிட்டிகை எடுத்து அனுபான மாகக் கொண்டு 10-20 நாட்கள் உண்டு, இச்சா பத்தியம் இருக்க, ஆஸ்த்மா தணியும்.

**கே: கருடங்கிழங்கை எப்படிப் பயன்படுத்தலாம். அதன் மருத்துவக் குணம் என்ன?**

ப: கருடங்கிழங்கு கிருமி களை அழிக்கும் ஆற்றல் உடை யது. தண்ணீர், மண் ஏதுமின்றி அந்தரத்தில் காற்றை உட் கொண்டு வளரும் அற்புதமான கொடியினம். இதனை வீட்டில் கட்டி, அழகுக்காகவும், கிருமி நாசினியாகவும் பயன்படுத்த லாம். பொதுவாக இதன் கிழங் கும், இலையும், இரத்தப் புண், புரைகள், கழலைக் கட்டிகளை போக்கவல்லதாகும். நஞ்சுகளை முறிக்கும் குணமுடையது.


ஆகாச கருடன்

கே: மந்தாரை இலையில் சாப்பிடுவதால் ஏதேனும் சிறப்பான பயன் உண்டா?

ப: இல்லாமல் இருக்குமா? உஷ்ண சம்பந்தமான நோய்கள் வராது. மந்தாரை இலைக் கஷாயம் சீதபேதி, ரத்த பேதி, உஷ்ண பேதிகளை நிறுத்தும்.




**கே: மூலிகைகளுக்காக—இத்தனை ஆண்டுகள் விடாப் பிடியாகப் பத்திரிகை நடத்தி வருகின்றீர்களே! லாபம் ஏதும் கிடைக்கிறதா?**

ப: 'விடாப்பிடியாக நடத்துகிறேனே' அதுவே ஒரு பெருமை தானே! மூலிகைகள் மீது எனக்குள்ள பற்றும், பாசமும் அவற்றின் பயன்களைப் பற்றி சித்தர்கள் கூறியுள்ள பெருமையுமே இப்பத்திரிகையை தொடர்ந்து நடத்துவதன் மூல காரணம். சித்தர்களின் மூலிகை அறிவை புதிய வடிவத்தில் பதிப்பிக்கும் இப்பணியில் எனக்கு பொருளாதார ரீதியாக நஷ்டம்தான். தொடர்ந்து ஆண்டுதோறும் நஷ்டம் என்றாலும், இதுவரையாரும் செய்திராத வகையில் விடாப்பிடியாக இப்பத்திரிகையினை நடத்திவருவதால் ஆன்மநிறைவுபெற்று வருகிறேன். அதுவே பெரிய லாபம் அல்லவா? அனைத்துக்கும் மேலாக, நல்வாழ்வு நல்கும் மூலிகைகட்கும், நல்வாழ்வு பெற விரும்பும் மனிதனுக்கும் இடையே ஓர் உறவினை ஏற்படுத்தி வைக்கின்றோமே என்ற புனித உணர்வே, நஷ்டத்தைப் பற்றி நினைக்காமல், மேலும் இப்பணியில் ஈடுபட வைக்கின்றது. வாசகர்களின் ஆதரவு மட்டும் மேன்மேலும் வளர்ந்தால், இந்த நஷ்டம் கூட ஏற்படாது. 'முருகன் அருள், மூலிகைகளின் பெருமை, வாசகர்கள் ஆதரவு' இம்மூன்றும் இருக்கும் வரையில், என் பணி இடையருது தொடரும். லாப நஷ்டங்களைக் கடந்து வாழும் பணி மூலிகை மணியின் பணி!

**கே: வேது பிடிக்க நல்ல மூலிகை எது? எந்த நோய்க்கு அவ்விதம் செய்யலாம்?**

ப: சன்னிக் காய்ச்சல், சீதளக் காய்ச்சல் ஆகியன வந்துள்ள போதும், தலைபாரம் போன்றவை இருந்தாலும், மஞ்சள் பொடியைக் கொண்டு வேது பிடிக்கச் சிறந்தது, நொச்சி இலையாகும். அதே போல் யூகலிப்டஸ் இலைகளையும், பயன்படுத்தலாம். காஞ்சீபுரம் சித்த மருத்துவர், சிற்சபை அவர்கள், 'வேது பிடிக்கும் பெட்டி' ஒன்றினை அமைத்து அதில், நொச்சி போன்ற மூலிகைகளைப் பயன்படுத்தி, காய்ச்சல், தலைபாரம் போன்ற நோய்களைக் குணப்படுத்தி வருகின்றார். நல்ல பலனளிக்கின்றதாம்.

**கே: நண்டினை இடித்து ரசம் வைத்து சாப்பிட்டால் சன்னி போன்றவை வராது என்கின்றார்களே! நண்டினை சாப்பிடலாமா?**

ப: நண்டினை எவ்விதப் பக்குவத்திலும் உணவாகச் சேர்ப்பது மருந்தாகாது. மருந்துகள் செய்வதற்காக, நண்டின் ஓடு ஆகியவற்றைப் பயன்படுத்துவார்களே தவிர, நண்டினையே சாப்பிடக் கூறவில்லை. எனவே, நண்டின் ரசம் சாப்பிடுவதற்கு மருத்துவ ஆதாரம் ஏதுமில்லை. ஆனால் சங்க காலம் முதலே 'நண்டு' உணவாக இருந்து வருகிறது. மருத்துவச் சிறப்பு ஏதும் இவ்வுணவுக்கு இல்லை.

**கே கடந்த இதழ் பெண்கள் பகுதியில் நீங்கள் குறிப்பிட்டுள்ள ஆவாரம்பூ, சீமை கிச்சிலிக்கிழங்கு, வெட்டிவேர் போன்றவற்றை வாங்கி ஆண்களும் பயன் படுத்தலாமா?**

ப: தாராளமாக! நன்னாரியையும், வேப்பிலையையும் சேர்த்து அரைத்து தினம் காலை, மாலை இருவேளை உடம்பில் தேய்த்துக் குளியுங்கள். வியர்வை நாற்றம் ஒழியும். தோலின் நிறமும் மாறி, மிருதுவாக மாறும்.

**கே: என் வயது 20, ஆண்மை சக்தி அடிக்கடி என்னையறியாமல் வெளியேறி விடுகிறது. இது பற்றி முழு விவரமும் எனக்குத் தெரியாது. இதனைத் தடுக்க என்ன செய்யலாம்? இதனால் உடலுக்கு தீமை ஏற்படுமா?**

ப: இளைஞர்களின் இளமைப் பிரச்னையான இதுபற்றி பலமுறை மூலிகை மணியில் கூறப்பட்டுள்ளது. உடல் வளர்சிதை மாற்றம்

காரணமாக, 16 வயதுக்குப் பிறகு ஆண்களுக்கு, 'ஆண்மை சக்தி' வளர்ச்சி சில நேரங்கள் அபரிமிதமாகி, மூன்று அல்லது ஆறு மாதத்திற்கொருமுறை வெளியேறும். இவ்விதமாயின் உடலுக்குத் தீமை ஏற்படாது. ஆனால், திரைப்படம், காதல் கதைகள், கவர்ச்சிப் படங்கள் காரணமாக, விகாரங்கள் மனதில் ஏற்பட்டு அதன் காரணமாக சில இயல்புக்கு மீறிய பழக்கங்களால் ஆண்மை உணர்ச்சி தூண்டப்பெற்று அதன் காரணமாக, ஆண்மை சக்தி அடிக்கடி வெளியேறும். மாதம் இரண்டு முறை: வாரம், நாள்தோறும் என்று இப்படி ஆண்மை சக்தி வெளியேறும். அப்படிப்பட்டவர்கள் உடம்பு நிலை பழக்கத்திற்கேற்ப, நரம்பு மண்டலம், இரத்த உற்பத்தி ஆகியன பாதிக்கப்பட்டு, பொதுவாக உடல், மன, மூளை வளர்ச்சி குன்றும். 25 வயதில், 16 வயது போல் எலும்பும் தோலுமாகக் காட்சி அளிப்பான். இந்த அபாயத்தை அறிந்து, ஆரம்பத்திலேயே உணர்ச்சிகளை சீர்திருத்தினால், இவ்வித செயற்கைத் தூண்டுதல் காரணமாக ஆண்மை சக்தி வெளியேற்றம் தடுக்கலாம். உணவில், அடிக்கடி முருங்கை, அரைக்கீரை, வல்லாரை, தூதுவளை, பசளை, மணத்தக்காளி, புளியாரை ஆகியனவற்றையும் காரட், பீட்ரூட், முள்ளங்கி, கருணைக்கிழங்கு, வாழை போன்றவற்றைச் சேர்த்து வர, ஆண்மைச் சக்திக் குறைபாடுகள் விலகும்.

**கே: 'மூளை வீக்கம்' எனும் நோய் அதிகமாகப் பரவி வருகிறதே. இந்நோயைத் தடுக்க முடியாதா? வந்தால் என்ன செய்யலாம்.**

ப: 'மூளை வீக்கம்' என்பது எதனால் வருகிறது என்பதைப் பொறுத்துத்தான் மருத்துவம் கூறலாம். என்றாலும், தொற்றுக் கிருமி காரணமாக வருவதாயிருப்பின் உணவில், வெண்டைக்காய், வெங்காயம், அகத்திக்கீரை, சிறுகீரை, வெந்தயக்கீரை ஆகியவற்றை அடிக்கடி சேர்க்கவும். வல்லாரைக் கீரையை, வாரம் இரு நாட்கள் 1 பிடி எடுத்து கஷாயம் செய்து பால் கலந்து பருகி வரலாம். இது தடுப்புச் சாதனமாகும். ஓமியோபதி மருத்துவத்தில் Echinacia Angustifolio என்றொரு மூலிகை மருந்துள்ளது, இதில் 5 சொட்டு எடுத்து, இரண்டு அவுன்ஸ் தண்ணீரில் கலந்து 5 நாட்கள் பருகி வர, நோய் வராது; வந்தாலும் குணமாகி விடும்.

**கே: மலேரியாக் காய்ச்சல் வராமல் தடுக்க என்ன செய்யலாம்?**

ப: வாரம் ஒரிரு நாட்கள் நிலவேம்பு, அதிமதுரம், நொச்சி, விஷ்ணுக்கரந்தை ஆகிய நான்கையும் கலந்த பொடியை, கஷாயம் செய்து பருகினுல் போதும். மலேரியாவிற்குத் தடுப்புக் குடிநீர் இது.

**கே: எனக்கு கடந்த ஆறு மாதங்களாக வயிற்றின் வலது பக்கத்தில் சாப்பிட்டவுடன் லேசாக வலி ஏற்படுகிறது. வேறெந்த தொல்லேயும் இல்லே. சில நேரங்களில் இந்த வலி அதிகமாகிறது. இதற்கு என்ன மூலிகை பயன்படுத்தலாம்?**

ப: தவருன உணவுப் பழக்கம், வேளே தவறிய உணவு காரணமாக, உள்ளுறுப்புகள் அழற்சியாகி, புண்ணுகி இருக்கக்கூடும். இதற்கு, பசளேக்கீரை, மணத்தக்காளிகீரை, ஆடாதோடை, கீழாநெல்லி, ஆவாரை, இவ்வைந்து கீரைகளேயும் ஒவ்வொன்றும் ½ பிடி எடுத்து குறுக நறுக்கி, ½ லிட்டர் நீர்விட்டுக் காய்ச்சவும். ¼லிட்டராக சுண்டிய பிறகு வடிகட்டி காலே 1 வேளே 1 குவளே எடுத்து 2 டீஸ்பூன் தேன்விட்டு கலந்து குடிக்கவும். இவ்விதம் 10 நாட்கள் பருகிவர, வலி படிப்படியாகக் குறையும். தொடர்ந்து 20 நாட்கள் செய்துவர, மூற்றிலும் குணமாகும். காபி, டீ, எண்ணெய்ப் பொருட்களே அதிகமாகச் சேர்க்க வேண்டாம். புதினு, கொத்துமல்லி, கறிவேப்பிலே, பெருங்காயம், பூண்டு, வெங்காயம் ஆகியன அதிகம் சேர்க்கவும்.

**கே: வாழைப் பூவினே உணவில் சேர்க்கின்றுர்களே! இதனுல் என்ன லாபம்? கசப்பாக இருப்பதால் சாப்பிட முடியவில்லே! அதற்கு என்ன செய்யலாம்.**

ப: லாபமில்லாமலா முன்னேர்கள் உணவில் சேர்த்திருப்பார்கள். வாழைப் பூவிற்கு பித்தத்தை தணிவிக்கும் குணமுண்டு. அத்துடன், உடல் தாதுக்களின் வளர்ச்சிக்கு உறுதுணேயானது. வைடமின் குறைவால் வரக்கூடிய கைகால் எரிச்சல், ஆசனக் கடுப்பு, ஆகியன குணமாகும். சீதபேதி, உள்மூலம், இரத்தமூலம் ஆகியன உடையவர்கள் வாழைப்பூ சாற்றினே 1 அவுன்ஸ் வீதம் பருகிவர, விரைவில் நிவாரணம் பெறலாம். நம் வீட்டு உணவில், வாழைப்பூவினே கடலேப் பருப்புடன் சேர்த்து கூட்டு, வாழைப்பூ வடை போன்ற உணவு வகையாகத் தயாரிப்பார்கள். இதில் கசப்புத் தன்மை ஓரளவு நீங்கும். கசப்புத் தன்மை தான், இதன் நோய்தணிக்கும் ஆற்றலுக்குக் காரணம்.

# தாவரங்களுக்கு மருத்துவம்

தொகுப்பு: T. L. சுப்பிரமணியன்

அட! இதேதடா புதுமாதிரியான தலைப்பு என்று மலைத்து விடாதீர்கள். மனிதனுக்கு நோய்கள் வருவது போன்றே தாவரங்களுக்கும் நோய்கள் வருகின்றன. அதனால் காய்க்காமல் இருக்கின்றன. இதற்கான மருத்துவ முறைகளை இக்கட்டுரையின்கண் காணலாம்.

## தாவரங்களைப் பற்றிய பொது அறிவு

உலகத்தில் பல இலட்சக் கணக்கான தாவரங்கள் உள்ளன. அவற்றில் குறிப்பாக வளருபவை மலைகளிலும், காடுகளிலும் உள்ளன.

காட்டில் வளருகின்ற செடிகளில் 1,25,000க்கும் மேற்பட்டவை உண்ணத்தக்கவை என்று மேல்நாட்டுப் புள்ளி விபரம் தெரிவிக்கின்றது.

பொதுவாக ஒரு மரத்தின் இலைகளினின்று நாள் தோறும் சுமார் 80 காலன் நீர் ஆவியாகிறது என்பர் அறிவியலார்.

தாவரங்கள் பூக்கும்போது முக்கிய பங்கு வகிப்பது 'புளோரிஜன்' எனும் ஹார்மோன் ஆகும்.

உலகிலேயே மிகப் பழமையான பயிர் மொச்சையாகும் இதுவே 'சோயா மொச்சை' என்று மேல் நாடுகளில் அழைக்கப்படுகிறது.

உலகிலேயே வேகவைத்தால் முளைக்கும் விதை ஒன்றுதான். அதன் பெயர் 'உடை மரத்தின் வித்து' இதனை நெல்லை மாவட்டத்தில் மிகுதியாகக் காணலாம்.

## இனி சில தாவரங்களுக்கான மருத்துவ முறைகளைக் காணலாம்

1. ரோஜா போன்ற பூச்செடிகளுக்கு நல்ல தரமான பூக்களைப் பெற நாம் உபயோகித்து எறிந்துவிடும் தேயிலைத் தூளை (சர்க்கரை இல்லாமல் வேரில் தினம் தினம் போட்டுக்கொண்டேவர நல்ல தரமான பூக்களைப் பெறுவதுடன் நல்ல மணத்துடனும் இருக்கும்.

2. கறிவேப்பிலை செடிக்கு தண்ணீர் ஊற்றும் பொழுது சிறிதளவு மோரையும் சேர்த்து ஊற்ற வேண்டும். இதனால் கறிவேப்பிலை நன்கு மணத்துடன் இருக்கும்.

3. செடிகள் நிறைய காய்க்க அரிசி களைந்த நீரையும், காய் கறிகளை வேகவைத்து சூடு ஆறிய நீரையும் செடிகளுக்கு தினம் ஊற்றி வர அதிகமான பலன் கொடுக்கும்.

4. முருங்கை மரம் நிறைய காய்க்க 50 கிராம் பெருங்காயத்தை $\frac{1}{4}$ லிட்டர் தண்ணீரில் கரைத்து, மரத்தின் அடியில் ஊற்றினால் காய்க்காத மரம் காய்ப்பதுடன் மட்டுமல்லாமல் நிறைய காய்களையும் தரும்.

5. கொடி வகைகள் நன்கு காய்க்க பழைய சோற்றைக் கட்டி கொடிகளின் வேர்ப் பக்கமாகக் கட்டினால் நன்கு காய்த்து பலன் அதிக மாகக் கொடுக்கும்.

6. வாழை மரக்குலையை அப்படியே வெட்டாமல் அவ்வப்போது தேவையான காய்களை மட்டும் வெட்டி எடுத்துக் கொண்டே வந்தால் மேலும் அதிகமான காய்களை அதே மரத்திலிருந்து பெறலாம்.

7. எல்லாவகை செடிகளுக்கும் சாம்பல் எலும்புத் தூள் (Bone Dust) இவைகளை தினந்தோறும் சிறிதளவு தூவிவர நன்கு வளர்ந்து பலன் தரும்.

8. வெள்ளாட்டுப் புழுக்கை, செம்மறியாட்டுப் புழுக்கை, பன்றி சாணம் இவற்றை குதிரையின் சிறுநீர் கலந்த நீரை கொய்யா மரத் திற்குப் பாய்ச்சினால் நிறைய பழங்களைத் தரும்.

9. எள் அதிமதுரம் இவைகளின் பொடியைத் தேன்விட்டு கலந்த பின்பு அதில் நீரை வேண்டிய அளவு சேர்த்து இலந்தை மரத்திற்குப் பாய்ச்ச வேண்டும். இவ்விதம் செய்தால் சர்க்கரையைப் போன்ற சுவையை உடைய பழங்களை அது நிறையத் தரும்.

10. ஏதாவது ஒரு மரத்தின் மலர் விழுந்து மணம் வீசும் அந்தத் தரையின் மணலை எடுத்து வந்து நல்ல மரங்களின் அடியில் கொட்டி னாலும் சரி (அ) கோஷ்டம் என்னும் மரத்தின் இலைகளை ஸுரா, முஸ்தா, தகரம், கசகசா இவற்றின் பொடி கலந்த நீரை மரத்தின் அடியில் பாய்ச்சினாலும் சரி, அந்த மரத்தின் மலர்களில் ஒரு மாதத் திற்குள் நல்ல மணம் வீசத் தொடங்கும்.

11. நல்ல முற்றிய கரும்புச் சாற்றைப் பாய்ச்சினுல் மலர் பருவம் இல்லாத காலங்களிலும் மலர்கள் பூத்துக் குலுங்கும்.

12. எள்ளு, பிண்ணுக்கு, சாணம் இவற்றைக் கரும்புச் சாற்றில் கலந்து வேரில் பாய்ச்ச, பாய்ச்சப்பட்ட மரத்தில் பூவும் பழமும், காலம் அல்லாத காலத்திலும் பூத்துக் காய்த்துப் பழுத்து அதிகமான பலனைத் தரும்.

13. அதிமதுரம், வெள்ளைச் சர்க்கரை, கோஷ்டம், இலுப்பைப்பூ இவற்றைச் சேர்த்துப் பந்து போல் செய்து மரத்தின் அடியில் வேர்ப் பகுதியில் போட்டு நன்கு மூடிவைக்க வேண்டும். அப்பொழுது மரத்தில் உள்ள பழங்கள் விதைகளே இல்லாத சுளைகளாகக் காணப் படும்.

14. இலுப்பைப்பூ, குன்றிமணி, சர்க்கரை, பெரிய அத்திப் பட்டை இலந்தன் பொடியில் நெய்யைக் கலந்து மரத்தின் அடியில் சிறி தளவு துவாரம் செய்து உள்ளுக்குள்ளே மேலே குறித்த கலவைகளை செலுத்த வேண்டும். பின் பசுங்கன்றின் சாணத்தினுல் குழைத்து மூட வேண்டும். பின்பு மரத்தின் பழங்கள் சுவை மிக்கதாயும் விதை அற்ற தாயும் இருக்கும். ❀ ❀ ❀

---

வள்ளலார் குறிப்பிடும்

# மூலிகைகளின் குண அனுபவம்



அருட்பெருஞ்சோதி வள்ளலான இராமலிங்க அடிகளார்' ஞான சித்தராவார். முதிர்ச்சி பெற்ற மருத்துவ ஞானமும் கைவரப் பெற்றவர். தம் நூல்களில் பல்வேறு மருத்துவக் குறிப்புகளையும், நல்வாழ்வு விதிகளையும் விரிவாகக் கூறியுள் ளார். குறிப்பாக திருவருட்பாவின் ஆறும் திருமுறையில், "திருநெறிக் குறிப்புகள்'' எனும் பகுதியில் 'ஓஷதியின் குணா னுபவம்' எனும் தலைப்பில் 480 விதமான மூலிகைகளின் நோய் தீர்க்கும் குண அனுபவங்களை அகராதிபோல் குறிப்பிட் டுள்ளார்; இவற்றில் அன்றாட வாழ்வில் நாம் பயன் படுத்தும் பல்வேறு கீரைகள், பழங்கள், காய்கறிகள் ஆகியன அடங்கி யுள்ளன. அவற்றின் பயன் தெரியாமலேயே உண்டு வரு கிறோம். இப்பகுதியில் வள்ளல் பெருமான் குறிப்பிட்டுள்ள மூலிகைகளின் குண அனுபவங்களை வாசகர் நலன் கருதி வெளியிட்டுள்ளோம். வள்ளலாரின் மருத்துவப் புலமைக்கும். நம் நாட்டு மூலிகைகளின் மாண்பிணையும் ஒருங்கே புலப்படுத் தும் இப்பகுதியை அன்பர்கள் படித்துப் பயன்பெறுவார்களாக!

## அகராதி

அகத்தி – வேக்காடு போம்.
அசோகு – குன்மம் போம்.
அதிங்கு – கால், கை, நோய் நீக்கம்; கர, பாத வியாதி நாசம்.
அத்தி – பெரும்பாடு போக்கி; உஷ்ண சமனி.
பேயத்தி – தம்பனை
அமுக்கிரு – க்ஷயம் போக்கி; வாயு போக்கி; வங்கம், நாகம், சிந்தூரி.
அம்பளங்காய் – கல்லுப்புக்கட்டு.
அரக்காம்பல் – சிலேட்டுமம் போக்கி:
அரசு – புத்திவர்த்தினி.
அரைக்கீரை – சுரம்போக்கும்; கருவங்க பற்பி.
அலரி – நடுக்கல் போக்கி.
அவுரி – லிங்கங் கட்டும்; சகல விஷம் போம்.
அழிஞ்சில் – விஷ மர்த்தனி.

அழிஞ்சில் மூலதைலம் – விரோசனி; லிங்க பந்தனி
அழுகண்ணி – சூதபந்தனம்.
தொழுகண்ணி – துணித்த சதை கூடும்.
அணிச்சை – சொறி போக்கி.
அஷ்டமதுகம் – பிரமியங்கள் போம்.
ஆகாச கருடன் – சூதபந்தனம்;
ஆடாதொடை – சுராரி.
ஆடுதின்னாப் பாளை – தாகபந்தனம்; புழுக்கொல்லி
ஆதண்டை – பீனிஸம் போக்கி; சிரநீர் போக்கி.
குழலாதண்டை – சரக்கெல்லாம் கட்டும்.
செவ்வாதண்டை – சூதவங்கி.
ஆதளைக்காய் – சூதஞ் சாம்.
ஆமிரம் – வெடியுப்புக் கட்டும்.
ஆயில் – வாதம் போம்.
ஆலம் – புழுக்கள் போம்.
ஆவாரை – ஈயச் செந்தூரி
ஆற்றுமருது – வழலைபோக்கி.
மாட்டுச்செவி மருது – வெள்வங்க பற்பி.
குதிரைச்செவி மருது – கருவங்க பற்பி.
இங்குணம் – லிங்கம் இறுகும்.
இச்சில் – குஷ்டம் போக்கி.
இடு கொள்ளு – சத்து ஆம்.
காட்டுக்கொள்ளு – காரம் சட்டும்.
நாட்டுக்கொள்ளு – சாரங்கட்டும்.
இதளை – சூலைபோம்
இமிற்கிழங்கு – இருளை நீக்கி.
இருப்பவல் – மாகட்டி
இரும்பிலி – கெந்தி தைலம்.
இருவாட்சி – ரத்தபித்தம் போக்கி.
இருவேலி – தாபத்தைப் போக்கும்.
இருள் – குடாரம் போக்கி.
பாலிருள் – சூத பந்தனம்.
இருள் வீடு – காந்த சத்து.
இலந்தை – கடுப்புப் போக்கி.
இலவம் பிசின் – சுக்கிலம்கட்டும்.
இலவு – அதிசார நீக்கம்.
இலுப்பை – விரணம் போக்கி.
மலையிலுப்பை – வாதம் போக்கி.
ஈகை – தாளக செந்தூரம்.
உகாய் – அப்பிரகஞ்சத்து.
உச்சிச்சில் – குதிரைப்பல்கட்டும்.
உத்தாமணி – மாந்தம் போக்கி. பவள பற்பி; அய சிந்தூரி;
ஊமத்தை – சூதவெண்ணெயிறுக்கி.
எருக்கு – சன்னி போக்கி; க்ஷீரமாணம் போக்கி.
வெள்ளெருக்கு – சாரங்கட்டி
எருமைக்கனைச்சான் – தேகசித்தி
எலிச்செவி – நீர்ச்சுருங்கி.
எலுமிச்சை – பித்தம் போக்கி.
ஒட்டை – புதரி நீக்கம்.
ஓதி – விரண மாற்றும்
ஒருகொம்பு – ரஜிதச்செம்பு.
ஒடமெட்டி – காய முறுதி.
ஓமை – தினவு போக்கும்.
ஓரிலைத் தாமரை – அழற்சிப் போம்.
கக்கரி – நீர் பெருக்கும்
கசப்புப் பசலை – சூதங்கட்டும்.
கஞ்சா – யோகி.
கஞ்சாங் கோரை – குளிர்போம்.
கடம்பு – பாஷாணபந்தனம்.
நீர்க்கடம்பு – நாக பந்தனம்; ஈயச் செந்தூரம்.
வெண்கடம்பு – சூத பந்தனம்.
கட்டுக்கொடி – உப்புக் கட்டு; சூத வெண்ணெய்க் கட்டு
கட்டுமா – தாபம் போக்கும்.
கணம்பு – சிலை மெழுகாம்.
கண்டங்கத்தரி – சுவாசமர்த்தனி
கப்பட்டி – குதிரைப் பல் மெழுகு
கழுகு – பற்குறுதி
கரிசாலை – பாண்டு மர்த்தனி, க்ஷய மர்த்தனி; வசிகரி.
கருங்காந்தள் – அறுத்த துண்டமொன்றும்.
கருங்காலி – குஷ்டாரி.
வெண் கருங்காலி – நாகமணி பந்தனி.
கருங்கொள் – உருக்கினமாதல்.
கரு நாயுருவி – கர்ப்பார்த்த பிரசவம்

கருநெல்லி—சகல சித்தி
கரும்பு — கல்லடைப்புப் போக்கி; பசாசு போம்
வெண் கரும்பு — க்ஷயம் போக்கி
கல்செம்பு — சூத குரு
கல்புகுவெள்ளி — காயசித்தி
கல்லரளி — தங்கச் செம்பு
கல்லாரை — சூதங் கல்லாம்
கழற்கொடி — விரைவாத மர்த்தனி
வெண் கழற்கொடி — குன்மமர்த்தனி
கழுதை மான் புள்ளி — வெள்ளீயங் கட்டும்
களவு தும்பை — மூலம் போக்கும்
களாவிழுது — வெடியுப்புகட்டு
கறுப்பறுகு — காசம் போக்கி
வெள்ளறுகு — மேகம் நீக்கி; சுரம் போக்கி
பவளவறுகு — சுவாசம் போக்கி
கற்ருழை — வங்க சிந்தூரி
செங்கற்ருழை — சிந்தூரத்தாதி
காகோளி — சலங்கணீக்கி
சீக்ஷ காகோளி—திறமுண்டாக்கி
காஞ்சிரம் — காயசித்தி
காஞ்சொறி — கபகாரி
பெருங்காஞ்சொறி — கபகாரி
காட்டாத்தி — கிராணி நீக்கி
காட்டாமணக்கு — அயலோக வங்கி
காட்டுக் கருணை—கெந்தி வெள்ளை
காட்டத்தி — கண்டர் வெளுப்பாம்
காட்டு வெந்தியம் — தாம்பர தங்க பற்பி
காரெள்ளு — திலகமாம்
காவட்டம்புல் — மந்தம்போக்கி
கான்ல்மா — பித்தளை நீறும்
கிளிமுருக்கு - அயச் செந்தூரம்
கீழாநெல்லி — காமாலை போக்கி; பித்தம் போக்கி
குப்பைமேனி — உப்புக்கட்டு
குமிள் — சன்னி மர்த்தனி
பெருங்குமிள் — சுரமர்த்தனி
குருதிமாறி — துரிசுச் செம்பு
குளிரி — உப்புக் கட்டி
குளுந்தகொள்ளி — குக்குடாண்ட ஜனிதி

குறட்டை — கோழை பீனிஸம் போம்
குறிஞ்சி — மயிலிற்கு சத்தாம்
குறுஞ்சூலி - அண்ட மெழுகு
குன்றிமணி — காரங்கட்டி
சூகை நீறு — உஷ்ணம் போக்கி
கொக்கிறகு — சாதிலிங்க மைனி
கொடிக்கள்ளி —பாஷாணக்கட்டு; நாக மணல்; நாக பஸ்பம்
இலைக்கள்ளி — பாஷாணஞ்சாம்
திருகுகள்ளி — கெவுரி கட்டும்
மான்செவிக்கள்ளி — நாகபற்பி; தாளகந்தகமெழுகு
கொடிக்கொத்தான் — பாஷாணங் கட்டும்
கொடிதும்பை — சூதங்கட்டும்
கொடிவேலி — சீதபேதி கட்டும்
கொடிவேலி மூல தைலம்—லிங்கங் கட்டும்
செங்கொடிவேலி — செந்தூராதி
கொட்டைக்கரந்தை — வாக்குதாரி
நாறுங்கரந்தை — காயசித்தி
கொத்தான் — பித்தம்போக்கி
கொம்மட்டி — வாதமாற்றும்
கொன்றை — கிருமி மர்த்தனி
கோடகசாலை—வயிறு புழுப்போம்
கோரைக்கிழங்கு — தோஷாரி
கோவை — ஜலக்கழிச்சலாற்றி
தீங்கோவை — பரவிந்துபந்தனி
சங்கங்குப்பி — குஷ்டம் போக்கி; கறப்பான் போக்கி
சடைச்சி — விரியன் விஷம்போம்
கப்புச்சடைச்சி—கண்டர் வெள்ளை
சதுரக்கள்ளி — பாஷாண மைனி
சத்திச்சாரணை — காரீய பற்பி; வாதநாசி
சத்துகம் — உப்புக் கட்டு
சர்க்கரை — தாகம் போக்கி; மயக்கம் போக்கி
சரளம் — தங்க நீற்றி
சற்பாக்ஷி — பாம்பு விஷம்போம்
சன்னை — சிலைகட்டும்
சாசி — பாம்பு, பக்ஷி கடிபோக்கி
சாயாமரம் — மா வேதை
சாறடை — திமிர்வாதமர்த்தனி

சித்தாமுட்டி – சுரமர்த்தனி; சூத பந்தனி
பேராமுட்டி – சர்வசுர மர்த்தனி
சித்தீஞ்சில் – சிரதோஷம் போம்
பேரீஞ்சில் – சுரங்கள்போம்
சிவப்பு நெல்லி – காயமுத்தும்; காய மழுத்தும்
சிவதை – விரோசனி
சிறுகல்லு – கல்லுப்பு கட்டு
சிறுநிலக்கு – நரைகள் போம்
சிறு புள்ளடி – கெணங்கள் போம்
சிறு விடுகொள்ளு – தண்ணீர் கட்டு
பெருவிடுகொள்ளு – சாரநாசி
சின்னக்லை – தைலத்தாதி
சீந்தில – காயசித்தி
சீவகம் – கல்லுப்புக்கட்டு
சுண்டைக்காய் – சுரங்கள்போம்
சுவ சற்பாக்ஷி – இங்குலிகங் கட்டும்
சுணே மரம் – சூத பந்தனம்
செங்கத்தாரி – அயச்செம்பி
செங்கழுநீர் – திரிதோஷம் போக்கி; வசீகரி
செண்பகம் – மருக்கள் போக்கி; பருக்கள் போக்கி
சிறு செண்பகம் – பித்தம் போக்கி
செந்தாடுபாவை – தங்கச் செம்பு
செந்திராய் – சூதச்செம்பு
செப்பு நெருஞ்சில் – சிறுநீர் உஷ்ணம் போகும்
செம்பரத்தை – சாதிலிங்கமைனம்
செம்பல்லி – சூதங் கட்டும்
செம்பை – தினவு போக்கி; சுரம் போக்கி
செம்மரம் – தங்கச் செம்பு
செம் முள்ளி – சிலேட்டும மர்த்தனி
செருந்தி – பாஷாணங் கட்டும்
செருப்படை–சிலேட்டுமம் போம்; மேகம் போம்
செஞ் சதுரக்கள்ளி–தங்க தாம்பரி
செவ்வகத்தி – சாதிலிங்க மைனி
செவ்வந்தி–சித்தப்பிரமைபோக்கி
குங்குமவந்தி – கோழைபோக்கி
செவ்விறகு – அயச் செம்பு

செழுமலர்க்கொன்றை – புழு நீக்கும்
பெருமலர்க்கொன்றை – கிருமி போக்கும்
சேவகனூர் கிழங்கு – கடிகை போக்கி
சோனகப்பூ – பாதரஸமாம்
ஞாழல் – தினவு போக்கி
தகரை – மாந்தம் போக்கி
தண்ணீர் மிட்டான்–சிங்கி செம்பு
தந்த சகுரி – இரும்புருக்கி
தமனகம் – தம்பனே
தலைச்சூடுவள்ளி – ரசங்கட்டும்
தழுதாழை – வாதம் போக்கி
தாமரை – கண்குளிர்ச்சி
,, வளையம் – நஞ்சுமுறிச்சி
,, மணி – வசிகரி
,, தாது – மேகம் போக்கி
,, கிழங்கு – ஆண்மை உண்டாக்கி; சூத பந்தனி
கற்றாமரை – லோகச் செம்பி
வெண்டாமரை – சூதபந்தனி
தாழை – சூதசுத்தி
தாளிப்பனே – சலங்கள்போம்
திப்பிலி – தாது விர்த்தி
திமிசு – சாரங் கட்டு
திராய் – சன்னி போக்கும்
தில்லை – பாஷாணஞ் சாம்
திலகம் – தொட்டிச்சிந்தூரம்
தின்பு – சிலை கட்டு
தும்பி – சூத பற்பி
சிறுதும்பி – சோகம் தீர்க்கும்
தும்பை – சுரங்கள் போக்கி; சில விஷம் போக்கி; சிரோரோகம் போக்கி
பேய்த்தும்பை– தோஷம் போக்கி
துரும்பு – சூதபற்பி
துளசி – நாகத்தைச் சுன்னிக்கும், தோஷம் போக்கி
கருந்துளசி – செந்தூரத் தாதி
இடுக்காட்டுத்துளசி – இரைப்பு நீக்கி
தூதுவளே – கபநாசி; அறிவு விர்த்தி
தெற்கை – கிரிச்சம்போக்கி; சுளுக்கு போக்கி

தென்னை – மருக்ஷபோக்கி
,, பூ – உபரச பந்தனி; மல பந்தனி; சுரோணித பந்தனி; உஷ்ண மர்த்தனி
தென்னை கேரம் – காயசித்தி
,, பழம் – ஈடுமுறித்தல்; அறிவு விருத்தி
தேக்கு – சிரங்கு நீக்கி
தேட்கடை – சிரங்கு நீக்கி
தேற்று – சல மலினுரி
தேவதாளி – சூத பற்பி
தாளி – இரைப்பு, இருமல் மூர்ச்சை போக்கும்
நறுந்தாளி – சிலேட்டுமம் போம்
நாகதாளி – நாகங் கட்டும்
ந்ச்சுப்பூலா – செந்தூர குருவாம்
நந்தியாவட்டம் – கண்ணுக்காம்
நரிமுருக்கு – க்ஷயம்போம்
நல்லாரை – சூத வெண்ணெயிறுகும்
நளந்துவயம் – நாகசெந்தூரி
நறும் பிசின் – நாகக் கட்டு
நறு முருங்கை – நாகரச பந்தனம்
நறு வெளி–நாக்குப் புண்ணுறும்
நன்னுரி – தேகசித்தி
நாகக்கொட்டை தைலம்–நாகங் கட்டும்
நாக சிங்கி – நாக பந்தனம்
நாகப்பாலை – தாம்பர செந்தூரம்
நாணல்–துன்மாங்கிஷம் போக்கி
நாயுருவி – மந்தாரி; குன்மகாரி
,, லவணம் – சருவ உபரச மர்த்தனி
நாய் வேளை – மலங்கட்டும்
நாவல் – விரணம் போக்கி; வங்க [பற்பி
நான்முகப்புல் – ஈய பற்பி
நிலககடம்பு – அப்பிரகஞ் சத்து
நிலச் சோதி – கண்டர் வெளுப்பு
நிலப் பனை – பாலையாம்; க்ஷயம் போக்கி; கரணரோக மர்த்தனி
நிலவாகை – புழுக்கள் போக்கி
நிலவுகாய் – சத்திறக்கி
நீரரளி – அயச் செம்பி
செவ்வரளி – தங்கச் செம்பி
நீர்த்திப்பிலி – சன்னிபோக்கி
நீர் முள்ளி – வீக்கம் போம்
வெள்ளி நீர்முள்ளி – செம்பு குருவாகும்
நீர்விரை – பைத்தியம் போகும்
நெட்டி – நீரைக் கட்டும்
நெபத்திகை – காயசித்தி
நெய்ச்சிட்டி – சீத சுரம் போக்கி; குன்ம நாசி
நெய்ம்ம மரம் – அரிதாரங்கட்டும்
நெரிஞ்சில் – மூத்திர கிரிச்சமர்த்தனி
நெல்லி – கெந்திச் செம்பு
நேர்வாளம் – பேதி
நொச்சில் – கடுப்புப் போக்கி
,, மூல தைலம்–லிங்கபந்தனி
,, பத்திரி – நீர்மர்த்தனி
கருநொச்சி – கறப்பான் போக்கி; வங்க பற்பி
பச்சை நாவி – சூதங் கட்டும்
பதுமுகம் – பாலையாம்
பருத்தி – பெரும்பாடு போக்கும்
செம்பருத்தி - பித்தம் போம்
பலாசு – பேதியாற்றி
முட்பலாசு – அரிதார நீறு
பழுப்பாகல் – லிங்க பந்தனி
பற்பாடகம் – சக்ஷாப்தம்
பனை – வறுத்தி
,, பூ – கப நாசி
,, குருத்து – க்ஷயம்போக்கி
,, மூலரசம் – சூத பற்பி
,, கிழங்கு – வறுப்பில் பற்பி; வறுத்தி
பாகல் – பாஷாண தோஷ மர்த்தனி
பாசிறில் – பாஷாணங் கட்டும்
பாலை – சுளுக்குப் போக்கி
திருநாமப்பாலை – பித்தாரி
குடசப்பாலை – அதிசார மர்த்தனி
வெட்பாலை – அயவங்கி; சூத சிந்தூரி
பழப்பாலை – பித்தாரி
பால்விழி – அயவங்கம்
பாவட்டை – வாதம்போக்கும்
பாற்பை – சவ்வீரங் கட்டும்
பித்த ரோகணி - கண்டுறந்தி; கண் குளுத்தி

பிரசூதிகை – வாயு ஹாரி
பிரண்டை – வைர நீற்றி;
சூத வெண்ணெய் பந்தனி
பிரபுணரிகம் - அப்பிரகசத்து
பிரமதண்டி - சூதங் கட்டும்
பிரமி – வீக்கம் போக்கி;
விரோசனி; வாத மர்த்தனி
பிராமுட்டி - சாரஞ் சாம்
பிறங்கு நாரி – வெடியுப்புக்
கட்டும்; பொட்டிலுப்புக்கட்டும்
பிறங்கை நாரி - கெவுரிக்கட்டு
புங்கு – சூலைபோம்
மேற்படி பால் - ரண மாற்றி
புல்லூரி – கருங்குட்டம்போம்
புளிச்ச சிறுக்கீரை சூத பந்தனம்
தாம்பர சிந்தூரி
புளிநறளை – திமிர் போக்கி
புளியாரை காய சித்தி
பித்தமர்த்தனி, லவணசிந்தூரி;
அப்பிரேக சிந்தூரி
புளிவஞ்சி - நாக ரசம்
புனம்புளி – சாரங் கட்டும்
புன்னை – விரண மாற்றும்;
கிரந்திபோக்கி
சுரபுன்னை - அரிதாரங் கட்டும்
பூசபத்திரி - வசிகரி
பூசனி - ஊறல் போக்கும்; வசீகரி
பூதணக்கு – மால்தேவிக்கட்டு
பூவரசு - சகல விஷ; குஷ்டம்
போக்கி
பூனைக்காஞ்சொறி – சிலேட்டும
மர்த்தனி
பூனைக்காலிப் பருப்பு - தம்பனி;
சுக்கில பந்தனி
சிறுபூனைக்காலி – நீரிறக்கி
பெருங்கம்பி – வெள்ளியபற்பி
பெருங்குரும்பை - பிறிவுக்காம்
பெருங்குறிஞ்சி - கடுப்புப்போம்
பெரு முள்ளங்கி-கிரிச்சரம் போக்கி
சிறுமுள்ளங்கி - கெந்திகட்டி
ஆற்று முள்ளங்கி – சிலேட்டுமம்
போக்கி
சுவர் முள்ளங்கி – நாகபற்பி;
உப்புக்கட்டி
பெருவாழை – ஈய செந்தூரி
பேயன் வாழை - காய சித்தி

பேயன் கிழங்கு வழலை போக்கி
மேற்படி பூ - சிந்தூரத்தாதி;
வசிய சித்தி
மேற்படி பத்திரி - உபரச
பந்தனி
மேற்படி தண்டு – சர்வ விஷநாசி
மேற்படி பனி – உபரசாதி
பவுதிக பந்தனி
மேற்படி லவணம் – சர்வ
பவுதிக பந்தனி
மேற்படி பழம் – ஜீரணகாரி;
மலம் போக்கி
மேற்படி காய் - குற்றம் போக்கி
மேற்படி பூ - சுக்கில பந்தி;
சுரோணித பந்தி; மல பந்தி
பேயன் மூலம் – மத நாசி
இதர வாழைப்பூ – பெரும் பாடு
போக்கி; பெரும் புழு போக்கி
பேய்க்கடலை — கெந்திதைலம்
பேய்க்கும்மட்டி — லிங்கங்கட்டும்
பேய்க்கொள்ளு—சகல சத்துமாம்
பேய்ச்சுரை விஷம் போம்
பேய்த்துமிட்டி — பாஷாணங்
கட்டும்
பேய்த் துவரை — தாளக தைலம்
பேய்ப் பீர்க்கு — கெந்தி தைலம்;
கெந்தகத் தைலம்
மற்றைப் பீர்க்கு — வாதசமனம்
பேய்ப்புடல் — பித்தாரி
பேராமல்லி — சுரங்கள் போக்கி
சித்தாமல்லி — சலவை போக்கி
பேர்சாரிபாதி — சூதபந்தனம்
பைசாசப் பீர்க்கு விஷம்போம்
பேதி
பொடுதலை — வயிறு கடுப்புப்
போம்; வெட்டை போம்;
நீரொழுக்குப் போம்
பொரும்பில் — விரணம் போக்கி
பொற்றலை — காய சித்தி;
சிந்தூராதி
பொன்மத்தை — சூதபந்தனம்
கருமத்தை — கெந்திபந்தனம்
பொன் வண்ணச்சாலி —
தங்கமாம்
பொன்னாங்கண்ணி —
கண்ணொளி; உஷ்ண சமனி

பொன்னுவாரை — ஈயசெந்தூரி
மலைபொன்னுவாரை—வீரமெழுகு
மஞ்சணுத்தி — உப்புக்கட்டி
மஞ்சிபத்திரம் — காந்தச்செம்பு
மணத்தக்காளி — தணலாற்றி
கருந்தக்காளி — கெந்திகட்டி
மந்தாரை — பாஷாண மைனி
மயிடவகம் — கெவுரிக்கட்டு
மயூரசிகை — நாகபந்தனம்
தாம்பரசிகை — சூதபந்தனம்
மராமரம் — சூடங் கட்டு
மரிதுடாரி — மால்தேவிபற்பி
மருக்காரை — நசியத்துக்காம்
மருதணி — அயச்செம்பி;
கெந்தி கட்டி
மருவகம் — தாகம்போம்
மருள் — விரணுரி
மலைமா — குடனீறும்
மலையத்தி — பேதிகட்டும்
மல்லிகை — எண்ணெய் போக்கி
கொடிமல்லிகை — தாரபற்பி
ஆத்திமல்லிகை — மேனி அழகி
மறிதொடரி — மால்தேவிபற்பி
மாகாளி — மயக்கம் போம்
மாஞ்சரோணி — கண் புகைச்சல்
தீரும்
மாதளை — அயமுருச்கி
கொம்மட்டி மாதளை — சத்தி
போக்கி
மாமரம் — வாந்தி நிற்கும்
மாவிலிங்கை — சன்னி நீக்கம்
மான் செவிக்கள்ளி — நாகபற்பி;
தாளகந்தனை மெழுகு
முசுமுசுக்கை — க்ஷய மர்த்தனி;
பவழ பஸ்பம்
முடக்கொத்தான் — வாதம்
போக்கி
முடவாட்டுக்கால் — சவ்வீரங்
கட்டும்
முட்பலா — ஆண்மை
முண்டிஎளி — சித்து
முதியார் கூந்தல் — காரியபற்பி
முத்தக்காசு—சுர தோஷம் போம்
முத்துப் பூடு — மிர்த பக்ஷி
சீவிக்கும்

முத்துருக்கன்செவி — சூத
பந்தனி
முந்திரிப்பழம்—தோஷம் போக்கி
புளிமுந்திரி — திரிதோஷம்
போக்கி
முருங்கை — கண் விரணம்
போக்கி
முருங்கை பூ — விந்து கட்டி
தாம்பர சுத்தி
முருங்கை மூலம் — கட்டு டத்தி
,, பிசின் — விந்து கட்டி
,, பத்திரி—மலம் போக்கி
,, ஈர்க்கு — வாயுமர்த்தனி
,, வேர்ப்பட்டை — வங்க
பற்பி
புனல் முருங்கை — நாகங்கட்டி
முல்லை — சோபந்தீரி
முல்லைப்பேதம் — முத்தோஷம்
போக்கி
முளக்கரணை — கிரந்தி போம்
முளிகாக்கு — கல்லுப்புக்கட்டு
முள்முள்ளி விரை — சர்வ சரக்கு
கட்டொடத்தி; தங்கச்சுன்னி
முள்வெள்ளரி — கிரிச்சாரி
முன்னை — மேக மர்த்தனி
மூக்குறட்டை — பீனிச மர்த்தனி
மூங்கிலரிசி — தோஷம் போம்
மூங்கில் குருத்து — ரத்தம்போம்;
வங்க வட்டை; வங்க பற்பி
மூவிலைக்குருத்து — சூதமணி
மேதை மகாதோஷம் போம்
மாமேதை — துஷ்டசுரம் போம்
ரத்தமண்டலி — இரும் புருக்கி;
பூரங்கட்டி
ருதந்தி — சிலை தைலம்
ரோம விருட்சி — சகல சித்தி
லோத்திரம் — கண்ணுக்கினிது
வெள்ளி லோத்திரம் — துரிசு
குரு: துருசு குரு
வஞ்சி — இடுப்புறுதி
வட்டத் திரிப்பி — பேதிமர்த்தனி
வலம்புரி — குளிதோஷம் போம்
வல்லாரை — உடலந் தேற்றி;
காமநாசி
வழுதலை — சிலேட்டும மர்த்தனி

சிறுவழுதலை — சுவாச
காசமர்த்தனி
வறச்சுண்டி — நீரைக் கட்டும்
வனமிட்டி — சாரங் கட்டும்
வன்மறை — அரிதார வெள்ளை
வன்னி — அயத் தாம்பரி;
லவண சிந்தூரி
வாகை — விரண நீக்கம்
கருவாகை — கெந்தி பந்தனம்
வாலுகம் – கடிகள் போகும்
வாழை – பெரும்பாடு போக்கி
வாழைக்கிழங்கு – உழலைபோக்கி
வாழைகளின் மூல சலம் — சர்வ
வுபரச பந்தனி
விடத்தேறி — சூத பற்பி
விட்டுணுகாந்தி – சுரங்கள்போம்
விலாமிச்சம் வேர் – பித்தாரி
வில்வம் – சத்தி மர்த்தனி
விளா – பித்தம் போக்கி
குட்டிவிளா – தாகமடக்கி
விருத்தி – சவுக்கார சுண்ணம்
வெட்டிவேர் – தாபாரி
வெட்புலா – உஷ்ணம் போம்
நீர்ப்புலா – போக மிக்காம்
வெண்கிலுகிலுப்பை – சூதபற்பி
வெள்ள நாக்ணத்தி – விரோசனி
வெள்ளுள்ளி – வாதம் போக்கி;
தேக வலுவி; மூலம் போக்கி
ஈருள்ளி – வேகம் போக்கி;
பித்த நாசி; சீதளி
வெள்ளைக் காக்கணுன் –
விரோசனி; தங்கச் சுன்னி
வெள்ளை யாமணக்கு – வாதம்
போக்கி
செவ்வாமணக்கு – சாதிலிங்க
பந்தினி
வெள்வேல் – விரணம் போக்கி
கருவேல் – பல்லிறுக்கி
வெற்றிலை – நாக நீற்றி;
ஜீர்ணகாரி; சூத சுத்தி
வேங்கை – கடி நீக்கப்
வேம்பு - பித்தார்
பெருவேம்பு – வாதாரி
நிலவேம்பு – சுராரி; சூதக நாசி;
வாயுகாரி
சர்க்கரை வேம்பு – காயசித்தி

(முற்றும்)

# சித்த (மூலிகை) வைத்தியக் கலை

— நஜன் —

உலகில் பலவகையான மருத்துவ முறைகள் உண்டு. இவைகளில் தமிழகத்தில் தொன்றுதொட்டு இன்றுவரை வழங்கி வரும் மருத்துவம் சித்த மருத்துவம். இதை நாட்டு வைத்தியம், வீட்டு வைத்தியம், பாட்டி வைத்தியம், மூலிகை வைத்தியம் என்றெல்லாம் குறிப்பிடுகிருர்கள்.

கி, மு. ஐந்தாம் நூற்ருண்டில் வாழ்ந்தவர் தொல்காப்பியர். அவர் நூலில் சித்த மருத்துவக் கருத்துகள் இடம் பெற்றுள்ளன.

இம்மருத்துவத்தை முறையாக வளர்த்தவர்கள் சித்தர் எனப்படும் ஞானிகள். தமிழகத்தில் எண்ணற்ற சித்தர்கள் வாழ்ந்தார்கள். அவர்களில் 18 பேர் அஷ்டமா சித்திகளைப் பெற்றவர்கள். அவர்கள் அகஸ்தியர், போகர், கோரக்கர், கைலாசநாதர், சட்டமுனி, திருமூலர், நந்தி, கூன்கண்ணர், கொங்கணர், மச்சமுனி, வாசமுனி, கூர்மமுனி, கமலமுனி இடைக்காடர், புண்ணுக்கீசர், சுந்தரானத்தர், ரோமரிஷி, பிரமமுனி.

இந்த மருத்துவத்தில் மூலிகை பிரதான இடம்பெறுகிறது. மூலம் என்ருல் வேர். சித்த மருத்துவத்தில் வேர் மிகுதியாகப் பயன்படுவதால் மூலிகை மருத்துவம் எனப்பெயர், சித்த மருத்துவத்தில் தேர்ச்சி பெற மருந்துச் செடிகளை பற்றிய நுண்ணிய அறிவோ, ஆராய்ச்சியோ இல்லாவிட்டால் ஒருவன் சித்த மருத்துவனாகத்திகழ முடியாது. ஆயிரம் வேரை (பேரை அல்ல)க் கொன்றவன் அரை வைத்தியன் என்பதுதான் சரியான பழமொழி.

## பழமையான வரலாறு

மூலிகைகளின் சரித்திரம் மிகப் பழமையானது. அதோடு மிக ருசிகரமானது வியாதிகளைக் குணப்படுத்தும் மூலிகைகள் பற்றிய அறிவு அக்காலத்தில் மிக அதிகமாக இருந்தது. வைத்தியத்தின் தந்தை என்ற புகழ்பெற்ற ஹிப்போகிராட்ஸ் சுமார் 400 மூலிகைகளைப் பற்றிய குறிப்புகளை வைத்திருந்தார். அவைகளில் சில இன்னும் உபயோகத்தில் இருக்கின்றன.

புதினு, சோம்பு இவ்விரண்டைப் பற்றி பைபிளிலேயே குறிப்பு இருக்கிறது. கொத்தமல்லியை பைபிள் காலத்தில் சொர்க்க உணவு என்று வழங்கி வந்துள்ளனர்.

மூலிகைகளைக் கொண்டே எப்பேர்ப்பட்ட வியாதிகளும் குணப் படுத்தப்பட்டு வந்துள்ளது,

"யோக ரத்குைகரம்" என்ற நூலில் ஸ்ரீசைல காண்டம் என்று ஒரு பகுதி இருக்கிறது. அதில் நித்தியாநந்த சித்தர் என்பவர் ஸ்ரீசைலத்தி லும் அதன் அருகிலும் 'கிடைக்கிற பெருமை வாய்ந்த இலை, வேர், மூலிகை முதலியவைகளைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிருர்.

மூலிகைகளில் வைட்டமின் சத்து நிறைய இருக்கிறது கிரகங்களின் சில குறிப்பிட்ட நிலைகளைப் பார்த்து அப்போது பறிக்கும் மூலிகைகள் மிகவும் வீரியம் பெற்றிருக்கும் என்று சொல்லப்படுகிறது.

மூலிகைகள் சாதாரணமாக செடி வர்க்கத்தைச் சேர்ந்தவையே ஆனாலும் சில மரங்களிலிருந்து கிடைக்கும் பழங்களையும் மூலிகை களாகச் சேர்த்தார்கள்.

மூலிகைகளைக் கொண்டு சில கடும் நோய்களைத் தீர்க்கும் வழி அதர்வண வேதத்தில் கூறப்பட்டுள்ளது. வெண்குஷ்டத்தைக் குணப் படுத்தும் செடி ஒன்றை முதன் முதலில் ஆஸூரி என்பவர் கண்டு பிடித்தார், கர்ப்பச் சிதைவு ஏற்படும்போல் இருந்தால் அதை தடுக்க பிருஷ்ணிபாணி என்ற பச்சிலை மருந்தாக உதவியன. (சுச்ருதரும் இதே மருந்தைக் கூறியிருக்கிருர்.)

அதிக வேலை செய்து தளர்ந்து ஜீரண உறுப்புகள் தளர்ந்துபோன நரம்புகள் ஆகியவைகளுக்கு ஊக்கம் கொடுக்க மூலிகைகள் சிறந்த சக்தி கொண்டவை கற்பூரப்புல்' ரோஸ்மேரி ஆகியவற்றின் இனிய வாசனையை அனுபவிக்கும்போது ஒரு புத்துணர்வு ஏற்படும். ரோஸ் மேரி என்பது வாடாப் பசுஞ்செடி. இதன் இலைகளிலிருந்து வாசனைத் தைலம் தயாரிக்கிருர்கள், அன்புள்ளவர்களின் நினைவு அகலாதிருக் கவும் சின்னமாக இதைத் தரிக்கிருர்கள்.

துளசியும் வில்வமும் மிகச் சிறத்த மூலிகை மருந்துகள். இந்திய விவசாயிகள் முன் காலத்தில் தங்கள் உறவினர்களையும் மிராசுதார் களையும் பார்க்கப் போகுமுன் தங்கள் மீது அவர்களுக்கு அனுதாபம் எழச் செய்வதற்காகத் துளசியை அணிந்து செல்வதுண்டாம்.

ஆதிகால மூலிகை மருத்துவர்கள் மூலிகைகளின் வாசனையைப் பற்றி நன்கு அறிந்திருந்தார்கள். 'மகத்தான பெயருடன் 1526ல் வெளியான நூலில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

மூளை பலவீனம் அடைந்திருந்தால் கஸ்தூரியின் வாசனையை நுக ருங்கள், துளசி, மன நலிவையும் போக்கி மனிதர்களுக்கு சந்தோஷத் தையும் உற்சாகத்தையும் அளிக்கும்.'

அச்மவேதி அல்லது சிலாபித் என்று ஒரு மருந்துச் செடிக்குப் பெயர். இது சாதாரணமாகக் கிராமங்களில் கிடைக்கும். கல்லைப் பிளப்பது இதன் குணம். தெலுங்கில் இதன் பெயர் கொண்டபிண்டி. (மலையைப் பொடியாக்குவது).

அஸ்தி சம்ஹாரம் என்று ஒரு மூலிகை முறிந்துபோன எலும்புகளைச் சேர்க்கும் தன்மையுள்ளது. விசல்யகரணி, சந்தானகரணி என்ற மூலிகைகளுக்கும் இத்தகைய குணங்கள் உண்டு. இத்தகைய மூலிகைகள் அனுமார் கொண்டுவந்த சஞ்சீவி பர்வதத்தில் இருந்ததாம். இன்னும் புத்தூரில் இத்தகைய மூலிகைகளைக் கொண்டு எலும்பை ஒட்ட வைக்கும் சிகிச்சை நடைபெறுகிறது.

ராவூல்பா சர்பெண்டினு என்ற மூலிகையின் இயற்பெயர் சர்பகந்தி. கி. பி, 1558ல் இதைப் பற்றி உலகுக்கு அறிவித்தவர் லியோன் ஹார்ட் ராவூல்ப் என்ற ஜெர்மானியர். இதைப் பற்றி சரக சம்ஹிதையிலிருந்து தான் தெரிந்து கொண்டதாக அவர் கூறினர். இந்த சம்ஹிதையில் 500க்கு மேற்பட்ட மருந்து மூலிகைகளின் விளக்கம் இருக்கிறது.

## ரோஜா நீக்கும் நோய்

அழகும்-மணமும் நிறைந்த ரோஜாப்பூ மனதிற்குகந்தது மட்டுமல்ல; மருத்துவத்திற்கும் உதவுகிறது.

ஃ பித்த நோய்கள், உள்ளுறுப்புக்களின் வலிமைக்கு, ரோஜாவின் குல்கந்து பெரிதும் உதவும்.

ஃ நீண்ட நாள் மலச்சிக்கல் உடையவர்கள் ரோஜா குல்கந்து அன்ருடம் சாப்பிட விலகும்.

ஃ உடல் எப்போதும் அனல் போல் இருத்தல், மூலச்சூடு ஆகியன விலக, ரோஜாப்பூ சர்பத் வாரம் இரண்டு மூன்று முறை அருந்தலாம்.

ஃ உடம்பின் வியர்வை நாற்றம் விலக, பாசிப் பயறு, அல்லது கடலை மாவுடன், உலர்ந்த ரோஜா இதழ்களை சேர்த்தரைத்து அன்ருடம் அதனை தேய்த்துக் குளிக்க, மேனி மணம் கமழும்.

ஃ தாம்பூலத்துடன் ரோஜா இதழ்களை வைத்துச் சுவைக்க, மணம் கமழும் வாய் நாற்றம் போகும்.

ஃ சீதபேதி, ரத்தபேதியின் போது, ரோஜா மலர் மொக்கு ஆகியவற்றைத் துவையல் போல் செய்துண்ண அவை நீங்கும்.

அழகுக்கும், மனத்திற்கும் நன்மை அளிக்கும் ரோஜா, மருத்துவத்திற்கும் பயனுவது வியக்கத்தக்கதல்லவா? மனிதர்களில் எத்தனை பேர் இப்படி இருப்பார்கள்? அழகானவர்களால் ஆபத்தல்லவா உண்டாகிறது!

சர்ப்பகந்தி செடியின் பழம் அரைச்சந்திர வடிவத்தில் இருக்கும். ஆகையால் இதை சந்திர மூலிகை என்றே அழைத்து வந்தனர். தலை வலியைப் போக்க இது வெகுவாகப் பயன்பட்டது.

இப்போது மூலிகை அகப்பட்டால் அதன் பெயர் தெரிவதில்லை. பெயர் தெரிந்தால் அந்த மூலிகை அகப்படுவதில்லை. பெயரும் தெரிந்து மூலிகையும் அகப்பட்டால் அதை எப்படி உபயோகிப்பது என்பது தெரியவில்லை.

சில மூலிகைகள் சில மாதங்களில் விளைந்தால்தான் பலன் கொடுக்குமாம்.

மரத்துக்கும் மருந்துக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு. 'மணிமர மாய மருந்து,' 'மருந்தாகி தப்பா மரத்தற்ருல்' என்ற பழம் செய்யுள் அடிகள் இத் தொடர்பைப் புலப்படுத்துகிறது.

இம் மூலிகைகள் சிலவற்றின் மகிமைகள் ராமாயணத்திலும் இடம் பெற்றிருக்கின்றன.

கம்பர் மருந்துமலை படலம் என்று ஒரு படலத்தையே பாடி தமிழ் நாட்டில் மூலிகைகள் நோயைக் குணப்படுத்த உபயோகிக்கப்பட்ட சிறப்பினை ராமாயணம் உள்ளளவும் நிலைத்திருக்கச் செய்திருக்கிருர். அம்மலையிலுள்ள மூலிகைகள் எல்லாமே மருத்துவத்திற்குப் பயன்படுதலால், அம் மலைக்கே மருத்துவமலை என்ற பெயர் ஏற்பட்டது. இதுவே சஞ்சீவி மலை.

இறந்தவர்களை மீண்டும் உயிர் பிழைக்க வைத்தல். போரில் வெட்டுப்பட்ட உடல் பாகங்களை ஒன்று சேர்த்துப் பொருத்துதல். உடலில் தங்கிய போர்க் கருவிகளை வெளிப்படுத்துதல் போரினுல் உருவமே மாறினுலும் பழையபடி அசல் உருவத்தை உண்டாக்குதல் இவை எல்லாம் மூலிகைகளாலேயே செய்ய முடிந்தது.

மாண்டவரை உயிர்ப்பிப்பது சஞ்சீவகரணி, வேறுபட்ட உடல் பாகத்தை இணைப்பது சந்தானகரணி; பழைய உருவத்தை கொடுக்கக் கூடியது சாவர்ண்யக்கரணி,

'சல்லிய மகற்றுவ தொன்று சந்துகள் புல்லுற
பொருந்துவ தொன்று போயின்
நல்லுயிர் நல்குவதொன்று நன்னிலம்
தொல்லையதாக்குவ தொன்று'

என்று இந்த நான்கு வித மூலிகைகளும் சஞ்சீவ மலையில் இருந்ததென்கிருர் கம்பர்.

## ரசாயன மருந்துகள்

மருத்துவத் துறையில் மூலிகைகளால் மட்டுமின்றி ரசாயன முறையினலும் மருந்துகள் தென்னுட்டில் அக்காலத்திலேயே தயாரிக்கப்பட்டன.

பொன் செம்பு போன்ற பல உலோகங்களைத் தணலில் புடம் போட்டு அவற்றை மருந்துகளாக மாற்றும் முறை சித்த வைத்தியத்தில் முக்கிய இடம்பெறுகிறது. தமிழ் சித்தர்கள் கண்டு அறிந்த முறையிது.

அகஸ்திய முனிவர் ஒரு மாபெரும் சித்தரே. பழைய தமிழ் வைத்தியத்தின் தந்தை இவர். உலோகங்கள், முத்து பவழம் போன்றவைகளை பஸ்பமாகவும் மாத்திரைகளாகவும் செந்தூரங்களாகவும் சித்தர்கள் பயன்படுத்தி வந்தனர். பழநி, திருச்செங்கோடு முதலிய கோவிலிலுள்ள மூர்த்திகள் நோய்களை குணப்படுத்தும் நவபாஷானங்களால் ஆனவை. ஆகவே இவைகளுக்கு அபிஷேகம் செய்யப்பட்ட நீர், பால் முதலியனவை சர்வரோக நிவாரணியாக விளங்குகின்றன.

சித்த வைத்தியத்தில் ரசவாதமும் உடலை முதுமையடையவிடாத காயகல்ப முறையும் மிக முக்கியத்துவம் பெறுகின்றன.

## ரஸவாத கலை

'கல்லை வயிரமணியாக்கல் செம்பை
கட்டித் தங்கம் எனச் செய்தல்
புல்லை நெல்லெனப் புரிதல்—என
விந்தை தோன்றிய இந்நாடு'

—பாரதியார்.

செம்பைத் தங்கமாக்க முடியுமா? முடியும். அதுதான் ரசவாதம்' உழவனிடமிருந்து மடாதிபதிகள் வரையில், சாதாரண பிரஜையிலிருந்து சக்கரவர்த்திகள் வரை எல்லாரும் பசி, தாகம், தூக்கம் இவைகள் எல்லாவற்றையும் மறந்து ஆர்வம் காட்டியுள்ளனர் இக்கலையில்.

சம்பந்தர், திருநாவுக்கரசர் போன்றவர்கள் செம்பைப் பொன்னுக்கி அதைக்கொண்டு அடியார்களுக்கு அன்னதானம் செய்திருக்கிருர்கள். சுந்தரமூர்ந்தி சுவாமிகள் விருதாசலத்தில் ஒரு செங்கல்லைத் தங்கமாக மாற்றினுர் என்று புராணம் கூறுகிறது.

சித்தர்களுக்கு இது ஒரு விளையாட்டு போன்றது.

மூங்கில் இலைச் சாற்றை தண்ணீர் பிழிந்து பழுக்கக் காச்சின இரும்பில் ஊற்றினல் தங்கமாகிவிடுமாம். இதைத் செய்து எல்லோரும் பணக்காரர்கள் ஆகாமல் இருக்க ஒரு முனிவர் மூங்கில் இலையிலிருந்து சாரே வாராமலிருக்க சபித்துவிட்டாராம். மூங்கில் இலையை எப்படிப் பிழிந்தாலும் ஒரு சொட்டு சாறுகூட வராது.

யிரம் ஆண்டுகூட வாழலாம் என்பதை சித்தர்கள் அறிந்திருந்தனர். இதுவே கட்டுவேத (காயகல்ப) முறை என அழைக்கப்படலாயிற்று.

தேகத்தில் ஒரு அங்கம் அல்லது பகுதி திடப்பட்டு மற்றொரு அங்கம் அல்லது பகுதி திடப்படாவிடில் அழிவு ஏற்படும். ஆகவே உடம்பிலுள்ள ஒவ்வொரு அணுவிலும் ரசத்திற்கு சக்தி ஏற்படுத்துவது அவசியமாகிவிட்டது.

இந்த நோக்கம் ஈடேற தாது வாதத்தில் ஆராய்ச்சி செய்தார்கள். சரீரத்தின் ஒவ்வொரு அணுவிலும் ரசம் பரவியுள்ளதா என்பதை பரீக்ஷிப்பது எளிதல்ல. ஆகவே செயற்கை முறையில் வேறு பரீக்ஷை செய்தார்கள். அதாவது தாமிரம் ஈயம் போன்ற தாதுப் பொருள்கள் ஒவ்வொன்றும் அதனதற்கே இன்றியமையாததான இயற்கை குணங்களையும் அமைப்பையும் குணங்களையும் மாற்றுதென்றால் அது அவ்வுலோகங்களின் இயற்கையான சேர்க்கையையும், தன்மையையும் மாற்றும் வகையில், ஒவ்வொரு அணுவிலும் மாறுதல் வேண்டும். இவ்வித உலோக மாற்று முறையே அணுபேதம் எனப்பட்டது. இதுவே பின்னர் ரஸவாதம் ஆயிற்று

ரஸவாதம் பற்றிய ஒரு சித்தர் பாடல்.

'வாதமாம் வெடியுப்பு சுண்ணத்தார்க்கு
வகையாக உற்றுமே யார்த்த பேர்க்கு
நாமமாப் பூ நீரை விட்டாயானால்
நலமானப் பயனில்லை நாடிப்பாடு
காதாம் இவை இரண்டால் வாத மாச்சி
கல்லென்று விட்டாக் கால் எல்லாம் போச்சி
நிதமாக துருசுதனை நீற்றுவிட்டால்
நிலைக்காது வாதமுதல் நீறாய் போச்சு
வாதம்தான் செய்யும் வகை அருமையில்லை
வாய்த்திறந்து பாராமல் வழலைப் பாடு
நீதம் தான் தவறினால் வாதம்யில்லை
நெறியை யுற்று பெருமையாய் பண்ணைக் கொண்ணு
வேதிலுள்ளபடி சொல்லி விட்டேன்
வேதாந்தம் சித்தாந்தம் இரண்டும் ஒன்று
நீதமாய் செய்தாக காம் பலனம் ஆகும்.
நிகழ்காலமெல்லாந் தூவிப் பதமுமாமே'.

சித்தர்கள் தங்கள் பார்வையாலேயே ரசவாதம் செய்யும் வித்தையைப் பெற்றிருந்தார்கள் என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

நோய் நாடல் நோய் முதல் நாடல் இவைகளில் சித்த முறையில் சில தனித் தன்மைகள் உள்ளன. நாடி பார்ப்பதிலும் ஒரு சிறப்பான

தனிமுறை பின்பற்றப்பட்டு வருகிறது. மூலிகைகளைவிட தாது உப்புகளில் தான் சித்தர்கள் கவனம் அதிகமாக சென்றிருக்கிறது. விஞ்ஞான பூர்வமான சோதனைகளை அதற்கான கருவிகள் எதுவும் இல்லாமல் மனித உடலில் உய்த்து உணர்ந்து அவற்றைக் குணப்படுத்தும் பத்திய முறைகளை சித்தர்கள் கண்டு பிடித்திருந்தார்கள்.

பண்பாடு மிக்க சமூகம் இயற்கையாகவே ஒரு வைத்திய முறையை அதன் தேவைக்குப் பெற்றிருக்கும். சித்த மருத்துவம் அப்படிபட்டது. மருத்துவத்தில் யோகம் தவம் மூலம் குறிப்பிட்ட சாதனைகளைச் செய்தவர்கள் சித்தர்கள். நன்றி : தினமணிச் சுடர்

10—8—78

## அருகம்புல் - அரிய மருந்து

ஃ அருகம்புல் பல நோய்க்கும் மருந்தாகும், என்பது வாசகர்கள் அறிந்ததே. அதனால்தான் நமது ஆசிரியர், எந்த நோய்க்கும் முதலில் 'அருகம்புல் முறிவு மருந்து' சாப்பிடச் சொல்வார். தற்போது விஞ்ஞான பூர்வமாக அருகம்புல் பல நோய்க்கு மருந்தாகப் பயன் ஆவதை பல பத்திரிகைகள் குறிப்பிடுகின்றன.

ஃ காலையில் வெறும் வயிற்றில் அருகம்புல் எடுத்து அலசி, பின் உரலில் போட்டு இடித்து சாறு பிழிந்து, அதில் ½ குவளை நீர் விட்டுக் குடித்து வரவேண்டும். அல்லது இளநீர் கலந்து குடிக்கலாம்.

ஃ இதனால் குடலில் சேரும் அமிலத் தன்மை குறைகிறது.

ஃ நரம்பு மண்டலங்கள் உரம் பெறும்.

ஃ இரத்தத்தில் சேரும் நஞ்சுகள் முறிகிறது, தூய்மை பெறும்.

ஃ மலச்சிக்கல் இளகி வெளியேறும்.

ஃ நோய் எதிர்ப்பாற்றல் பெருகும்.

ஃ தொந்தியைக் குறைக்கும்.

ஃ பல் ஈறுகள் கெட்டிப்பட்டு, இரத்தக் கசிவு நிற்கும்.

ஃ தாதுவின் பலத்தைப் பெருக்கும்.

ஃ குழந்தைகட்குப் பாலுடன் அருகம்புல் சாறு கலந்து கொடுக்க சளி சேராது.

ஃ வயதானவர்கள் அன்றாடம் பருகிவர, சளித் தொல்லை இராது.

ஃ சிறுவர்களுக்கு அவ்வப்போது அளித்துவர, சொறி, சிரங்கு ஆகியன வராது.

ஃ தொழு நோயாளிகள் ஆரம்ப கட்டத்தில் அருகம் புல்லைப் பயன்படுத்த நோய் கட்டுப்படும்.

அருகம் புல்லின் அளப்பரிய மருந்து தன்மைகள் உண்டென்பதை, அனுபவத்தில் கண்ட ஆசிரியர் கண்ணப்பர் தம் நூலில் முதல் பாகத்தில், முழுதுமாகப் புகழ்ந்துள்ளது தக்க சான்றாகும்.

கருத்து மலர்கள் :

# தமிழாராய்ச்சி-
# சில சிந்தனைகள்

டாக்டர். ந. சஞ்சீவி

மனிதனைப் பிற எல்லா உயிர்வகைகளினின்றும் வேறுபடுத்தி வீறு படுத்துவது அறிவு. இந்த அறிவின் பன்முகச் சிறப்புகளைப் புலப்படுத்தவே பகுத்தறிவு, மெய்யறிவு, நுண்ணறிவு, நூலறிவு என்றெல்லாம் அடைகளின் துணைகொண்டு பேச்சு, செய்யுள் ஆகிய இரு வழக்குகளிலும் வேறுபடுத்தி வியந்து கூறி விளக்குவர். ஆனால் இவ்வெல்லா வகை அறிவுகளும் இறுதியாகப் பயன்படுவது இரண்டே இரண்டுக்குத் தான்; ஒன்று ஆராய்ச்சிக்காக; மற்றொன்று அனுபவத்திற்காக, இந்த இரண்டையும் 'பண்பும் பயனும்' என்று வள்ளுவர் மொழியில் பாராட்டிப் பகரலாம். ஆராய்ச்சி இல்லாத அனுபவம் போலி அல்லது போதாது. அனுபவத்தில் ஆழ்த்தாத ஆராய்ச்சி, பயனற்றது.

மேற்கண்ட விளக்கத்தின் அடிப்படையில் தமிழாராய்ச்சி தழைத்துள்ள வகையையும் பிழைத்துள்ள நிலையையும் எண்ணிப் பார்த்து வருங்கால வளத்திற்கு ஏற்றன கூறவே இச் செறிவுக் கட்டுரையின் சிறந்த நோக்கம்.

முதற்பத்தியில் சொல்லிய கருத்தை இந்த மூன்றும் பத்தியில் வேறு சொற்களால் விளம்புதல் .மேற்கண்ட-மேற்கொண்ட-சிந்தனைக்கு மேலும் மேன்மை செய்வதாகும். அது, இது ஆராய்ச்சி பயன் ஆக்கம்-தனி மனிதனுக்கும் சமூகத்திற்கும் ஏற்படும் ஆக்கம். இக்கருத்தை ஒப்புக்கொண்டால் உடனடியாகத் தோன்றும் வினா எது, எவை? ஆக்கம்-இதில் முறை வைப்பு (Priorities) உண்டா? இந்த வினாவிற்கு விடையிறுத்துச் செயல்படுவதே வளர்ச்சிக்கு-வாழ்வுக்கு வழி.

மேற்கண்டவாறு எண்ணும் போல தமிழ் வளர்ச்சிக்குத் தலையாய தேவைகள் என்று எண்களுக்குப் படுவன ஊற்று நூல்கள் (Source books) ஊன்று நூல்களாகப் பயன்படத் தக்க இந்த ஊற்று நூல்கள் எவை? 1. மொழி அகராதிகள், 2. நூல்-கட்டுரை-அடைவுகள், 3. புதுவகை-புதுமுறை ஆராய்ச்சிகளுக்கு அறிஞர்கள் தரும் கருத்துகள் பற்றிய பதிவேடு (register) 4. எல்லா வகையான மொழி அகராதிகள்,

நூலடைவுகள் நூற்றுக் கணக்கில் (முடியுமானால் ஆயிரக் கணக்கில்) தயாரிக்கப்பட வேண்டும் என்பது விரிவாக விளக்கப்பட வேண்டியது.

மேற்கண்ட முயற்சியை வெற்றியாய் முடிப்பதற்கு உடனடியாக- ஐந்தாண்டு காலத்துள் செய்ய வேண்டியது. எடுத்துக்காட்டாக எல்லாப் புது அமைப்புகளும் உறுப்புகளும் கொண்ட ஒரு மையத் தமிழியல் பார்வை நூலகம் (A Central non lending reference library for Tamilology). அடுத்து பத்தாண்டு காலத்திற்குள் செய்யத் தக்கது, குறைந்தது ஆயிரம் பேர்கள் கொண்ட நாட்டுப்புறத் தமிழியல் பற்றிய ஆய்வாளர் படையில் முழு நேர உழைப்பு. மூன்று பத்தாண்டுக் கால எல்லையில் தொகுக்கப்பட்ட நூல்கள் நாட்டுப்புற இயல் ஆய்வில் குறிப்புகள் இவற்றைத் துணையாகக் கொண்டு வரலாற்று அடிப்படையில் வகை தொகை செய்து வெளியிடப்படும், அகராதிகள்-நூலடைவு-கட்டுரையடைவு. இப்பணியைச் செய்ய குறைந்தது ஆயிரவரின் பத்தாண்டு முழுநேர உழைப்பு தேவைப்படும்

மேற்கண்ட பணிகளை ஒழுங்குற-உண்மையுற செய்து முடித்தாலன்றி தமிழாய்விலும் ஆக்கத்திலும் முழுமைக்கு நெருக்கமான முன்னேற்றத்தையும் காண முடியாது.

இன்று தமிழாராய்ச்சி உள்ள நிலையில் இருக்கின்ற குறைபாடுகளைக் கேட்டறியும்-கண்டறியும் பணியும் உடனடியாக மேற்கொள்ளப்பட வேண்டும். 'குற்றமுணர்வான் குணவானுவான்.'

இப்பணிகளோடு ஒரே காலத்தில் செய்யப்பட வேண்டிய இன்னொரு சீரிய முயற்சி வடமொழி பற்றியும் பிற இந்திய மொழிகள் பற்றியும் ஏனைய உலக நாட்டு மொழிகள் பற்றியும் எவ்வெவ் வகையான வளர்ச்சிகள் எவ்வெவ்வாறு வளர்ந்துள்ளன என்பதைத் தக்கார் குழுக்கள் அமைத்து கண்டறிதல்-கேட்டறிதல் வேண்டும்.

இச்செறிவுக் கட்டுரையில் செப்பியுள்ள அடிப்படை ஆக்கவேலைத் திட்டங்களை நிறைவேற்ற தேவைப்படும் பணம் தமிழ்நாட்டில் மட்டுமேயுங்கூட தனியார் துறையிலும், பொதுத் துறையிலும், தேர்தல் துறையிலும் பழக்கப்படும் பணத்தின் அளவை நோக்க, கால்காசுக்கும் மேல் தேவையிராது. இச்செலவைப் பொருட்படுத்தாமல் உண்மை உணர்வோடு செயல் புரிந்தால் வேலையில்லாத் திண்டாட்டம் மட்டுமின்றி அறிவில்லாத் திண்டாட்டமும் அறவே அகல அடிப்படை ஏற்படும்.

மேற்கண்ட அடிப்படைகளில் முயன்றால்தான் கி.பி. 2000 லேனும் தமிழாராய்ச்சி தலைநிமிர்ந்து நிற்க முடியும்.

# பூநீர் சந்திரகலை 10ன் 301 நாள் (7 நாட்களுகள்) 10 மாத கெற்ப ரகஸியம்

— ஸி. மெய்யப்ப சுவாமி —

திருவள்ளுவ நாயனுர் நவரெத்தின சிந்தாமாணி 800ல் 12வது பாடலில் 'ஏகவஸ்து வறிய' எனும் தலைப்பில்,

'யோகிக்காகு முடற்குறி கற்பமும்
போகிக் கெய்தாப்பொருள் சித்தியில்லைகாண்
தோகை நாதஞ் சுரோணிதம் பூநீர்தா ஃ
ஏகவஸ்து யினியறியா ராண்டையே'

என்கிருர்.

யோகிகளானச் சித்தர்கட்கு உடலின் உயிரான பிராணவாயு உண்டாக்கி அழியாமல் நிலைநிறுத்தக் கூடிய அணிஃவஸ்துவான குறிகாளன விந்துநாதமே கற்பமாகும். போகிகளான கனும, குரோத, லோப, மதம், ஆச்சர்யம், மிகுந்தவர்களுக்கு இவைகளை விரித்து கூறினும் அவர்கட்கு இவ்வஸ்து விளைவும் நிலையும், உபயோகமும் விபரீதமாகவும், அருயையாகவும், கேலியாக விமரிசித்து தூற்றவுமே ஆகும் (ஒருவர் எப்பொருளையும் எந்த நிலையில் என்ன எண்ணத்தில் காண்கிருரோ அப்பொருள் அவ்விதமே தோன்றும். உபயோகமாகும் என்பதாம்.) ஆதலின் போகிகட்கு உடற்குறி கற்பமான விந்துநாத மெய் ஞான வஸ்த்து சித்தி இல்லை. ஆனதால் தோகை நாதம் நாதத்தின் கலைகள் குறைந்த நீரே நாதத்தின் சுரோணிதம் (பஞ்சபூத சுரோணிதம் அல்ல ஆகவே பெண் எனும் சந்திர நீராகிய சுரோணிதமே பூநீர். இந்தப் பூநீர்தான் ஏகவஸ்துவான பிர்மமாய் பின் விந்துநாதமெனும் விந்தால் ஆதியில் இருந்தது என்கிருர். அதே நூலில் 619வது பாடலில் சுத்த கெங்கையாவது சுக்கிலச் சுரோணித மாகையால் முன்னமே முடிந்திருப்பதைக் காணுர்களெனல்,

'சுத்தகெங்கை சுரோணித நாதமாம்
சொன்னுல் தோஷம் வந்தெய்திடும் சுக்கிலம்
கர்த்தன் சொன்னக் கருத்தறிந் தோதயான்
கலிகளேதுக் கண்டவர் விண்டிடார்

முத்தர்களான முன்னோர்க ளோதினர்
முன்னமே முடிந்ததைக் காண்கிலார்
வித்துவென்ன விந்துப்பதுவும் விந்துதான்
மேதினி புவிதோறும் விளைவதே'

சுத்த கெங்கை என்பது சுரோணித நாதமான சந்திரகலை அம்ச மாகும். இதை விவரித்து வெளியில் சொன்னல் தோஷமென்ற பெரியோர்களான ஞானசித்தர்கள் சாபம் நிச்சயயமாய் நமக்குக் கிடைக்கும். சுக்கிலம் என்பதும் விந்துதான் அல்லது விந்தின், அம்ஸம்தான்; இவ்வாறே சுரோணிதம் என்பதும் நாதம்தான் அல்லது நாதத்தின் அம்சம் தான். இதன் விபரம் கர்த்தனுகிய இயற்கை தெய்வத்தால் அறிந்தேன், என்கிருர். இதை கண்டோர்க்கு கலி என்ற சனியான ஆயுள் குறைவான வறுமையே இல்லை; இதை உடல் உயிர் நீடிக்க சித்தர்கள் கூறினுர்கள். ஆதியிலே (முழுமையாக முடித்து வைக்கப்பட்ட முப்பொருளும் ஒன்ரு கக்கூடின வஸ்த்து இருக்கிறது. நான் எழுதி இந்த பிர்ம கல்பமெனும் முப்பு செய்பாகம் கைபாகங்களுடன் கூடிய இயற்கை வஸ்துவை பிரித் தெடுத்து செய்யும் செயற்கை வழியாகும். இயற்கையாகவே முடிந்த வஸ்த்து எடுத்தால் என்ன செய்வது என்பதே! நான் கூறும் இந்த சேர்க்கைபாக முப்பூ கைவசமிருந்தால்தான் முழுமையான ஆதி முப்பூ அதில் நிலைக்கும். இந்த ஆதி மூப்பூ நாம் உண்டால் நம் சரீரம் தாங்காது. ஆனதால் சேர்க்கை பாக முப்பூவை முடித்து நாம் உட்கொண்டு நம் சரீரமும் பூரணகலை வீரியத்துடன் இருந்தால்தான் ஆதிமுப்பு உட்கொள்ளமுடியும்; நம் சரீரமும் தாங்கும் இதன் விபரம் அகாரதீக்ஷையில் கூறுகிறேன்) ஆனதால் வித்துவான விந்தே உப்புதான். உப்பு என்பதும் அகாரம் எட்டாகிய விந்தும் உலகினில் எங்கும் நிறைந்து விளைகிறது என்கிருர். இந்த விந்துவில் இருந்து விளைவாகி கலை குறைந்திருக்கும் பூநீர் எனும் பிறப்பு எங்கு எவ்விதம் 10 மாதம் (301 நாள் கெற்பம்) என்பதை கவனிப்போம். முன் கூறிய 8வது அத்தியாயத்தில் கூறிய பெண்ணின வகுப்பு 4ல் உள் ஜாதி நான்கில் வயது 7, 10, 12, 16 என பரிபாஷை பொருளில் கூறி உள்ளார்கள். இப் பரிபாஷை பொருள் என்னவென்ருல் 7வது பத்மினி என்றும், 12வது சங்கினி என்றும, 16வயது அத்தினி என்றும் கூறப்பட்டுள்ளது. இதில் ஒரு பெண் புஷ்பித்த நாள் முதல் 7 நாள் வரை வயது 7. 10வது நாள் வயது 10, 12வது நாள் வயது 12. 16வது நாள் வயது 16, என்பதே. நிற்க பெண் புஷ்பித்த முதல் நாள் கொண்டு சரியாக 7வது நாள் வரை 301 நாள் அல்லது 10 மாதம் இந்த நாட்கள் 7ல் விந்துநாதம் ஒன்று கூடி புணர்ந்து ரவி மதி யெனும் பிண்டம் உற்பத்தியாகிறது. இந்த 7ம் நாள் பிண்டம்தான் பூநீர். (7, 10, 12, 16 வயதின் விபரம் மச்சமுனி பொருள் நூல் காவியம் ரசவாத லக்ஷணக் குறிப்பு 00ல் விபரம் காண்க.) (மூன்ரும் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள பிர்ம குலம், க்ஷத்திரிய குலம் இரண்டின் பிண்டமாகிய கருவின் விபரம் வேறு.) இந்த 6ம் நாள் பிண்டத்தின் கெற்ப விபரம் அகஸ்தியர் நாலு காண்டம் இந்திரஜாலம் 1200ல் 4வது வகார காண்டம் 300ல் 46வது பாடல் முதல்,

'நீடுவார் நாற்பத்து ஒன்பதாம் நாள்
நிர்மலமே யாகுமது மூன்று வாரம்
கூடுவார் மற்றும்நாள் வெண்மையாகும்
குறியடா மூவர்நிலஞ் சமரர்க்காகும்
பாடுவாரி தையல்லோவுரைத் தாரப்பா
பழுக்காதுப் பலியாதுச் சாபமென்று
நாடுவாரிந்த வண்ணமூன்று பாகம்
நான்கண்டேன் நீகாணவழி சொன்னேனே'

என்கிறார்.

பெண் புஷ்பித்த அன்று விந்தாம் கெற்பமான 49 நாள் ஆகும். (சுயவிந்து நாதகெற்பமல்ல இவை மிகமிக கலைகள் குறைந்த விந்துநாத கெற்பமாகும்) இது கிழமையில் ஞாயிறு என்ற சூரியன். இந்த நாள் 59க்கு வாரம் 3 என்ற 7 நாள் பிண்டம் 16 கலைகளைக் கொண்டதாகை யால் 3 வாரம் என்ற மூன்றாம் நாள் பிண்டத்திற்கு $16 \times 3 = 48$ ஒரு நாள். விந்துநாதம் கூடிய நாளில் 1 நாளுக்கு நாழிகை 1, வினுடி 10, விகலை 18, தற்பரை 45 ஆனதால், 48 நாள் என்பதற்கு $56\frac{1}{4}$ நாழிகை ஆகும். எனவே நாழிகை 1, வினுடி 10, விகலை 18, தற்பரை 45ம் விந்து நாத கெற்பத்துள் இருப்பாக நின்றது. ஆகவே 49 நாள் ஒரு மண்டலம் என்றும் 7 நாட்களுக்கு 10 மாதம் 301 நாள் என்றும் ஆகியது. இதில் நாட்கள் 7ன் விபரம் 1 கடகம் சந்திரன் திங்கள், 2 சிம்மம் சூரியன் ஞாயிறு. 3 கன்னி புதன் 4 துலாம் சுக்கிரன் வெள்ளி 5 கும்பம் சனி

## மணத்தக்காளி மகிமை

மார்க்கெட்டில் கிடைக்கும் மணத்தக்காளியை எல்லோரும் அறிவோம், அதன் மருத்துவ மகிமையை யாரறிவர்?

ஃ கடுமையான உழைப்பு காரணமாக உள்ளுறுப்புகள் அழற்சி அடையும். அதனை ஆற்ற, வாரம் 1 முறை மணத்தக் காளியை உணவில் பயன்படுத்தலாம்.

ஃ குறிப்பாக வாய்ப்புண், நாக்கு ரணம், உதடு, உள்நாக்கு ரணம் ஆகியன விலக, மணத்தக்காளி இலைச்சாறு 1 அவுன்ஸ் எடுத்து தேன் 1 அவுன்ஸ் கலந்து பருகவும். விரைவில் குண மாகும்.

ஃ மணத்தக்காளி வற்றல், பத்திய உணவிற்கு உகந்தது. கீரைப்பூச்சி போன்ற கிருமித் தொல்லை உடையவர்கள், மணத் தக்காளி வற்றலை உண்டு வர, அவை வெளியேறும்.

ஃ குன்மநோய், வயிற்று நோய், வயிறு பெருக்கம், வாய்வுத் தொல்லை உடையவர்கள், வாரம் இருமுறை மணத்தக்காளி கீரையை சமைத்துண்டுவர, நோய் கட்டுப்பட்டு, குணமாக வழி ஏற்படும்.

6 மீனம் வியாழன் 7 மேஷம் செவ்வாய் ஆக நாட்கள் 7. மாதம் 10ன் விபரம் ஆடி மாதம் பெண் எனும் சந்திரனின் வீடான கடகத்தில் சூரியனாகிய ஆண் வந்து ஒன்று சேரும் நாள் (ரவி மதி கூடும் நாள்) அமாவாசை அன்று. ரவி எனும் விந்துவும், மதி எனும் நாதமும் கூடி (கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம், மேஷம்≡மாதம் 10) பெண் முதல் புஷ்பித்த நாள் அன்று ஆடி மாத அமாவாசை அன்று தொட்டு 7ம் நாள் சித்திரை மாத பௌர்ணமி சந்திரன் 16 கலைகள். இதன் விபரம் பின், இது வெண்மை பொருந்தியது இதில் உவரான விஷத்தன்மை உடையது. சமரர் என்ற துர்ச்சனருக்காகும். இது பூரண கலைகளுடன் பழுக்காதது. எதிலும் பலன் தராது சாபமெனும் அழுக்கையுடையது. இந்த விதமாக 8 பாகம் நான் கண்டேன். நான் கண்ட மூன்றுவித செய் பாகமும் நீ கண்டு செயல்பட்டு பலன் அடைய வழி கூறுகிறேன் என்கிறார்.

‘சொன்னவகை விபரங்கள் நன்றுய்தோணும்
துதிபெருமே வாலைமனோன்மணி யினோடு
இன்னவகை யிரண்டாம்பூ பூத்தநாள்தான்
இனிய தொண்ணூற்றெட்டில் ரவியொளியாம்பூவை
சொன்னவழி வர்க்கமப்பா யழிக்கச்செய்து
சுருதியிலே மூன்றுபூ நாற்பத்தேழு
வண்ணமது ரவிபோல பிரகாஸிக்கும்
மகத்தான நாள்தனையே வைத்திடாதே’

என்றும் முன் கூறிய விபரங்கள் நன்றுய் தோன்றும்படி கூறினேன் இரண்டாம்பூவான பெண் பு[illegible]பித்த 2ம் நாள் 98 நாளாகும் இதை எடுத்தால் எந்த இனத்திலும் பிரயோகம் செய்தாலும், அதன் வர்க்கமான அடிப்படையை அழித்துவிடும். (முதல் விலக்கு கண்ட பெண்கள் தொடும் மரம் செடி கொடிகள் தீய்ந்துவிடும். விஷத்தன்மையுடையது இதற்கு தூமை, மாத விலக்கு, வண்ணான் அழுக்கு, தீட்டு, என்பது முறிக்கப்பட்ட விஷமாகும்) புஷ்பித்த 3ம் நாள் 147 நாளாகும் பிரகாசம் உண்டு ஆனால் கலைகள் கிடையாது ஆகவே 3ம் நாள் எடுக்கக்கூடாது என்கிறார்.

‘அய்த்திடா நாலாம்பூ நூற்றுயெண்பத்
தறுநாளு மொன்பதுநாள் தள்ளுதள்ளு
மயத்திடா யஞ்சாம்பூ யிருபத்தேழு
மைந்தனே யொன்பது நாளுறையுப் பாரு
வியத்திடவே யாறும்பூ கேளுகேளு
இருநூற்றறுபத்து யேழ்நாள் தானப்பா
பயத்திடவே சோடஸங் குறையும்பாரு
பருவமடா யேழாம்பூ முப்பத்திமூன்றே...’

நான்காம் பூ என்ற பெண் புஷ்பித்த 4வது நாள் விந்துநாதம் கெற்பமான 195 நாளில் 9 நீக்க 186 நாள். புஷ்பித்த 5ம் நாள் 245 நாளைக்கு 18 நாள் நீக்க 227 நாட்கள் புஷ்பித்த 6ம் நாள் விந்துநாதம்

கெர்ப்பமான 276 நாள் இதில் 9 நாளை நீக்க 267 நாள். இதில் முன்பு குறைந்து வந்த நாட்கள் 36. இந்த 36ல் 3 நாட்கள் நீக்க 33 நாட்கள் எனவே 7ம் நாள் 33 நாட்கள் முன் 6ம் நாள் 267ல் 33ஐ, சேர்க்க 300 தாள் 10 மாதம், வாரம் 1 என்றாலும் 301 நாள்தான் கணிதம் வரும்.

'மூன்றான யிருநூற்று பத்தேழு
முப்பத்தி மூன்றுமடா முன்னூரும்நாள்
ஆணாள் பெண்ணாள் அலியுமானாள்
அப்பவல்லோ நாதாக்க ளாத்தாலானாள்
தூணானாள் துரும்பானாள் துரும்புத்தூணாய்
தொடுமுன்னேப் பழுத்துவிட்டாள் சூரிசூரி
வீணாளோ யிருப்பாளோக யந்தாய்காமி
வெகுவிலே கோபியடா விஞ்சைபாரே...'

என்கிறார்.

ஆனதால் பெண் புஷ்பித்த 7ம் நாளில் மாதம் 10. நாள் 301 விந்து நாதம் கூடிய பின் விந்துவினுள் நின்ற நாதத்தின் கலை 16 சந்திரன். இந்த 16 கலைகளில் சந்திரன் தன் கலைகளில் நான்கை தாரகைக்கு கொடுத்தது போக மீதம் 12 கலைகள் நிற்க ரவியாகிய சூரியன் கலைகள் 16 இந்த சூரிய கலை 16ல் சந்திரனுக்கு சூரியனால் கொடுக்கப்பட்ட கலைகள் 4. முன் சந்திரனின் மீதம் கலைகள் 12 இத்துடன் சூரியனால் கொடுக்கப்பட்ட கலைகள் 4ம் சேர 12+4=16 இந்த 16 கலைகளும் பௌர்ணமி. இந்த பௌர்ணமி முதல் 15 நாட்களுக்குள் சூரியன் தான் கொடுத்த 4 கலைகளையும் சந்திரனிடம் இருந்து கிரகித்துக் கொள்வதால் சந்திரன் கலை (வலிமை) இழக்கவும், சூரியன் கலைகள் (வலிமை) 16 பெறவும் முடிந்தது வலிமைக் குறைந்த சந்திரனும் (பெண்) வலிமை

மிகுந்த சூரியனும் (ஆண்) ஒன்ருய் சேரும் நாள் அமாவாசை. அன்று தான் பெண்கள் மாதவிலக்கு இதைக் குறித்து மாதவிலக்கு என்ற இருளே உண்மையான அமாவாசை. அமாவாசை மறுநாள் (மாத விலக்கு கண்ட மறுநாள்) பிரதமை முதல் 5. 7ம் நாள் சதிபதிகள் உடலுறவுகொள்ள பிண்டமான கரு சிசு கெற்பத்துள் அமைகிறது. மாதவிலக்கு கண்ட 8ம் நாளில் இருந்து சதிபதிகள் பின் 7 நாட்களில் உடலுறவு கொண்டால் கெற்பத்தில் கெற்பப் பிண்டம் அமையாது. பிரதமை முதல் (அமாவாசை தொட்டு) 15 நாட்குள்ளாக சூரியன் கிரகித்துக் கொண்ட கலைகள் நான்கும் சூரியனிடம் இருந்து விடுபட்டு கொஞ்சம், கொஞ்சமாக மதியிடம் சேர்வதால் மதி வளர்ந்து தன் பூரணக்கலை 16ம் அடைகின்றது அன்று பௌர்ணமி. சந்திரனிடம் சூரியன் கொடுத்த கலைகள் நான்கை சூரியன் கிரகிக்காவிடில் உலக ஜீவராசிகள் பிறக்க, இயங்க இயலாது. பெண் இனத்தில் அலி எனப் பெயர். நிற்க பெண் இனத்தில் மாத விலக்கைக் கொண்டு மாதவிலக் கான மறுநாள் பிரதமை முதல் பௌர்ணமி வரை 15 திதிகளும் ஓர் பெண்ணிடம் அந்த, அந்த திதிகளின் நிலைக்கும் அமிர்த நிலையை நெருடி உணர்ச்சி தூண்டி உணர்ச்சி இழக்கச் செய்யலாம். இவ்விதமே பூர்வபட்சத்திற்கும் பொருந்தும். இதை ஏன் இங்கு குறிப்பிட்டேன் என்ருல் வானில் ஏற்படும் பௌர்ணமி அமாவாசை தொட்டு திதி பார்த்தது அந்த அந்த திதியில் நிற்கும் அமிர்த நிலையை பிரிப்பது இயலாத காரியம். ஆனதால் மதியாகிய பெண்ணின் நாதகலை முன் 15 நாளில் குலைந்து வந்து 15ம் நாள் கலை இழக்கிறது (மாதவிலக்கு) வானில் ஏற்படும் மதி ரவி கணிதங்கள் யாவும் சரீரத்தில் கலைகளை கொண்டுதான் பிரிக்கப்பட்டது. வானிலை கோள்களும் சரீர நிலை அடுக்கின் கோள்களும் ஒத்துதான் வரும். ஆனதால் முப்பு முடிக்க பூநீர் எடுக்கும் மாதம் மேஷம் எனும் சித்திரை மாதம் அல்ல. சித்திரை மாதப் பௌர்ணமி நாளுமல்ல. சித்திரை மாதம் பௌர்ணமி திதி என்ருல் மாதமும் திதியும் மட்டும் போதாது அன்று செவ்வாய்க் கிழமையும் உத்திர நக்ஷத்திரமாகவும் அன்று மேஷத்தில் சூரியனும், சுக்கிரனும் கூடி இருக்க வேண்டும் அவ்விதம் 'நாளும் நக்ஷத்திரமும்' இரண்டும் ஒன்று சேர்ந்து அமைவது சில வருடங்களுக்கு ஓர் முறை தான். இவ்விதம் மாதம், நாள் திதி நக்ஷத்திரம், கோள் அமைவது இயற்கையான பெண் இனம் புஷ்பித்த 7ம் நாள் பிண்ட பூநீரில்தான் இதற்கு சான்று அகஸ்தியர் பரிபாஷை திரட்டு 500ல் 6வது காண்டம் பந்தர் ஓமகுண்டமெனும் பகுதியில் 26வது பாடலில்,

'மாதமென்று வாடாதே பதினைந்துக்கு
மகத்தான வுத்திரமென்றுரை சேய்நாளில்
நாதமென்ற பூர்வமாம் பக்ஷந்தன்னில்
நன்மைபெறுஞ் சுக்கிரனுங் கூடும்போது
வேதமெனும் விலாஸத்தின் பூமிகண்டு'

என்கிருர்.

இவ்விதம் யாவும் அமைவது பஞ்சபூத பூமியில் இயற்கையான வஸ்த்துவில்தான் அமையும். மற்றவை தாம் செயர்க்கையாக அமைக்

கப்படுவதே ஆனதால் கடகமாகியப் பெண் இனத்தில் நாதமான சந்திரன். (12 கலைகள்) எனும் சக்தியுடன், சூரியனாகிய ஆண் (16 கலைகள்) விந்து கூடியதே அமாவாசை. இந்த ஞாயிறும் திங்களும் கூடி நாளுக்கு நாள் வளர்ந்து, சித்திரையெனும் மேஷமாகிய செவ்வாயின் அச்சமான பிரணவபீடத்தில் (வீட்டில்) சூரியன் 12 கலைகளாகவும் பௌர்ணமியான பூரணம் என்ற பொருளுடன் வகாரமென்ற வாயு கூராக 10 கலைகளான பூநீர் எனும் சுரோணித நீர் உதிப்பு. அன்று மேஷமெனுஞ் சித்திரை முதல் மாதமாகிய செவ்வாய் வீடான பிரணவத்தில் சூரியன் உச்சமாகவும், அதே இடத்தில் விந்து சுடரின் அம்சமான சுக்கிரனெனும் வெள்ளியும், உத்திர நட்சத்திரமும் கூடிய சூரியன் ஆட்சியான வலிமையால் சந்திரன் 16 கலைகளாக அமையப் பெற்ற வஸ்த்துவில் பிறந்த சுரோணிதமான நாதமே பூநீர். (கார்த்திகை, உத்திரம், உத்திராடம் சூரிய மகாதிசை) ஆகவே சூரியனால் சந்திரனுக்குக் கொடுக்கப்பட்ட கலைகள் நான்கையும் மறுபடி சூரியன் கிரகித்துக்கொள்ளாவிடில் சந்திரனின் வலிமையே மிகுந்தும், சூரியனின் வலிமைக் குறைந்து பகல், இரவு இன்றி இருக்கும். இவ்வாறே பெண்ணினத்தில் மாதவிலக்கு என்ற இருளாகிய அமாவாசையும், பௌர்ணமி எனும் பூநீர் சுரோணித நீராகிய அமிர்தமுமாகிய ஒளியும் விளைவு இல்லை யெனில் பூவுலகில் மானிட வர்க்கமே ஜெனனமாக வழியில்லை.

திருமூலர் திருமந்திரம் 3000ல் சந்திரயோகமெனுந் தலைப்பில் 11வது பாடல்,

‘முற்பதினைஞ்சில் முளைத்துப் பெருத்திடும்
பிற்பதினைஞ்சில் பெருத்தது சிறுத்திடும்
அப்பதினைஞ்சு அறிய வல்லார்க்குச்
செப்பறியான் கழல் சேர்தலுமாமே’

என்கிறார்.

இந்த 10 கலைகளையுடைய சந்திரனாகிய பூநீர் வஸ்து முண்டமாகிய பிண்டசாரம். இதற்கு நந்தீஸர் நிகண்டு 300ல் 155வது பாடலில்,

‘மூலமப்பா வேறில்லை சாரமூலம்
முண்டமப்பா பிண்டத்திலுதித்த சாரம்
தூலமப்பா காரத்தில் சேர்ந்ததாலே
துகண்ட சத்திநாதமது சாரமாச்சு’

என்கிறார்.

அகாரத்தின் வஸ்துவின் வழிகாண பூநீர் எனும் சாரமே மூலபீடம், தலையாகிய நாதத்தை நீக்கிவிட்டு முண்டமான காரம் விந்துவான பிண்டத்தில் பிறந்த சாரம் பஞ்சபூத மானிட உருவமமைய காரமாகிய விந்தில் சேர்ந்தால் சத்தியெனும் நாதம் வலிமை குறைந்து சாரமாகியது. இந்த நாதமான சாரமே சுரோணித மெனும் பூநீர்.

(தொடரும்)

# வெளிநாடுகளுக்குச் செல்லும் மூலிகை மருந்துகள்

## ஆர். கெ. ரங்கன்

நாட்டு மருந்துகளும், மருத்துவமும் நம் நாட்டில் விரும்பிய பயனை தரவில்லை என்று பலர் எண்ணுகின்றனர். ஆனால் அயல் நாடுகளில் நம் நாட்டு மூலிகைகளிலிருந்து தயாரிக்கப்படும் மருந்துகள் மீது எல்லையற்ற மோகம் ஏற்பட்டுள்ளது!

### மேற்கு ஜெர்மனிக்கு பற்பொடி

பற்களை பாதுகாக்கத் தேவைப்படும் பல பொருள்களை கண்டு பிடித்து உற்பத்தி செய்துவரும் ஜெர்மனி பற்பொடி பாக்கெட்டுகள் 60,000 வரை அனுப்பிவைக்கும்படி கேட்டு ஓர் ஆர்டர் அனுப்பி வைத்துள்ளது. மேற்கு செர்மானியர்களுங்கூட தமது விரல்களால் பற்பொடி கொண்டு எகிர்களை சுத்தம் செய்து, பல் துலக்குவதை கற்பனை செய்து பாருங்கள். இது மட்டுமா? யூகோஸ்லேவியா நாடு அங்கு இத்தகைய தயாரிப்புகளை உற்பத்தி செய்வதற்குத் தேவையான முதலீட்டுச் செலவுகள் முழுவதையும் செய்ய முன் வந்துள்ளது.

### யூகோஸ்லேவியா மருந்து தயாரிப்பு நிலையம் நிறுவ விரும்புகிறது

யூகோஸ்லேவியர்கள் முதலீடு முழுவதும் செய்வதுடன் தயாரிப்பு முறைகளை தருவதற்கான ராயல்டி பங்கு உரிமைகளையும் அளிக்க தயாராகி இருக்கின்றனர். உற்பத்தியாவதில் மூன்றில் ஒரு பங்கு பங்கும் தர தயாராக இருக்கின்றனர்.

### விந்தையான ஆதரவு

திரு. ஜி கெ பெந்தர்கள், தமது பொருள்களை விற்பனை செய்ய யூகோஸ்லேவியா சென்றிருந்தார். அங்கு அப்பொழுது இது போன்ற தாராளமான ஒத்துழைப்பைக் கண்டு பிரமித்துப் போய்விட்டார். இந்தத் தொழில் துறை ஒத்துழைப்பைப் பற்றி பேச்சு வார்த்தைகள் நடந்து வருகையில் யூகோஸ்லேவியர்கள் அவரது தயாரிப்புகளுக்கு அவசரத் தேளவகளுக்காக மேலும் ஒரு பெரிய தேவை நமூனாவை அனுப்பியுள்ளார்கள்.

### பிரிட்டனுக்கு கருவேலம் குச்சி வேண்டுமாம்!

ஆங்கிலேயர்கள் ஆயுர்வேதத்தின்பால் கொண்டுள்ள பற்று மிகவும் விசேடமானதாகும். அவர்களுக்கு சுவைத்து, துலக்கி, எகிர்களை தேய்ப்பதற்கு கருவேலங் குச்சிகள் வேண்டுமாம்!

## புற்று நோய்க்கு கஷாயம்

அண்மையில் ஓர் அமெரிக்கர் இந்தியாவில் அடிப்படை ரசாயனங்கள், மூலிகைகள், மருந்துகள், அலங்காரப் பொருள்கள் ஏற்றுமதி வளர்ச்சிக் குழுவுக்கு, புற்றுநோய் மருத்துவத்திற்கு ஆயுர்வேத முறையில் தயாரித்த மருந்துகள் கேட்டு எழுதியிருந்தார். இக்குழுவுக்கு இத்தகைய மருந்து தயாரிப்பாளரின் முகவரி கண்டுபிடித்து அளிப்பதற்கு சில காலம் தாமதமேற்பட்டது பிபா எனும் காய்களின் கஷாயம் வண்ணார்கள் துணி வெள்ளாவி வைக்கும்பொழுது அடையாளமிட பயன்படுத்தும் காய்களிலிருந்து தயாரிக்கும் கஷாயம் மிகுந்த பயன் தரும் என்று எண்ணினர்தள். அதன் விளைவாக வேறு தொல்லைகள் எழாதென்றும் இந்திய மருத்துவர்கள் கருதுகின்றனர். பல்வேறு புற்று நோய் ஆய்வு நிலையங்கள் இந்த மருந்தை மேலும் சோதனைகள் செய்து வருகின்றன. அமெரிக்க அபாயக் குரலின் விசேடம் யாதெனில், இந்த ஆயுர்வேத கருத்துகளின் வீரியம் பற்றி அவர்களுக்கு நல்ல செய்திகள் இருந்தன என்பதுவே. ஆனால் இந்த மருந்துகள் நம் நாட்டில் பெயரளவில் கூட தெரியாதிருந்தன.

## பண்டைக் காலம் தொட்டு பழக்கத்திலிருந்து வருகிறது

ஆயுர்வேத முறை என்பது பண்டைக் காலம் முதல் இந்தியத் துணைக் கண்டத்தில் இருந்துவரும் ஒன்றாகும். இம்முறையில் பல நூண்டுகளாகவே மேனாடுகள் விரும்பி நம்பிக்கொண்டு வருகின்றன. மேற்கு ஜெர்மனியிலுள்ள ஒரு மருத்துவமனையின் ஒரு பிரிவு முழுவதும் இம் முறையையே பயன்படுத்தி வருகின்றது. அப்பிரிவில் மூலிகை மருந்துகளே முழுதும் அளிக்கப்பட்டு வருகின்றன. அங்கு 12 பேர்கள் கொண்ட இந்திய மருத்துவக் குழு, இந்திய முறையில் நோய் பரிசோதனையும் செய்து மருந்தும் அளித்து வருகின்றது

## உலகமே மூலிகைகளின் பால் திரும்புகிறது

உலகமே மூலிகை மருந்துகளை விரும்பும் இயல் தோன்றியிருப்பதால், நாட்டின் மூலிகைகளை மேலும் திட்டவட்டமாக பயன்படுத்துவது சாத்தியமாகியுள்ளது. பலவகை மூலிகைகள், அவைகளின் இலைகளாலும், தண்டுகளாலும், கொடிகளாலும், தாள்களாலும், காய்களின் மேல் உள்ள ஓடுகளாலும், வீயைகளாலும், முளைகளாலும், பட்டைகளாலும், பூக்களாலும், பட்டைகளாலும், பூக்களாலும் மென்மேலும் மருத்துவத்திற்கு பயன்பட்டு வருகின்றன, பூண்டைப் பயன்படுத்துவதின் மூலம் வயிற்றுக் கோளாறு, அஜீரணம், குடல் புண் முதலியவை குணமடைகின்றன. இறற்கை புல், பூண்டுகளே மனிதனின் உடல் கோளாறுகளை தீர்த்துவிட முடியுமென்று தோன்றுகிறது.

## பூண்டின் மகிமை

பூண்டு ஊளைச் சதை, அசதி, வயிற்றுப் பொறுமல், தீராத அஜீர்ணம், குடல் புண் முதலியவை குணமடைகின்றன. இயற்கை

புல், பூண்டுகளே மனிதனின் உடல் கோளாறுகளை தீர்த்துவிட முடியு மென்று தோன்றுகிறது.

## பூண்டின் மகிமை

பூண்டு ஊளைச் சதை, அசதி, வயிற்றுப் பொறுமல், தீராத அஜீர்ணம் முதலியவைக்கு கைதேர்ந்த மருந்து. டைபாய்டு, டிப்திரியா போன்ற கொடிய நோய் தடுப்புக்கு பூண்டு ஒரு கைகண்ட மருந்து. பூண்டின் ரசம் ஒரு சிறந்த விஷ மருந்து. சரும நோய்களுக்கும் சிறந்த தெனக் கருதப்படுகிறது, பப்பாளியின் பால் கர்ப்பச் சிதைவுக்கு நல்ல மருந்தெனக் கூறப்படுகிறது. அதன் காயும், பழமும் ஜீர்ணத்துக்கு உதவுகின்றன. குங்குமப்பூ சிறுமூச்சு, வயிற்றுக் கோளாறுகளைச் சரி செய்து வீரிய விருத்தியளிக்கிறது என்று சொல்லுவார்கள்.

## மூங்கில் மருந்துகள்

மூங்கிலிலும் பலவகை மருந்துகள் தயாரிக்கப்படுகின்றன. தோல் மீது காணும் வெள்ளைத் தழும்புகள், வெண்குட்டம் முதலியவற்கு இது சிறந்த மருந்தாகும். இரத்த நோய்களும், கட்டிகளும், சிரங்குகளும் இதனுல் குணமடைகின்றன. வெற்றிலை பாலுணர்வைத் தூண்டுகிறது. இதன் விளைவாகவே நமது குடும்பங்களில் திருமணமாகாத ஆண் களும், பெண்களும் வெற்றிலை போட தடை செய்கின்றனர். திரு மணத்தில் ஏராளமாக அது பயன்படுத்தப்படுகிறது! வில்வ வேரின் தோல் முறைகாய்ச்சல் இதயத்தின் படபடப்பு, சோர்வு, தொடர்ந்த நம்பிக்கை இழப்பு ஆகியவைகளுக்குச் சிறந்த மருந்தாக இருந்து உருகிறது.

## துளசி

இந்தியக் குடும்பத்தில் பக்தியோடு பாராட்டப்படும் துளசிக் குரிய மருத்துவக் குணங்கள் பற்றி பல நாடுகளில் ஆராய்ச்சிகள் நடைபெறு கின்றன. துளசி இலைச்சாறுக்கு சிலந்தி, குடல் புழு, நாடாப்புழு முதலி யவற்றை அகற்றும் வலிமையுள்ளது தோல் மீது வரும் படையையும் அகற்றிவிடுகின்றது. அன்ருடம் சில துளசி இலைகளை தின்றுவந்தால் காய்ச்சல், சளி முதலியவை வராமல் பாதுகாக்கும்.

## வேப்பிலை

வேப்பிலைக்கு பல நச்சுக்களைக் கொல்லும் திறனிருக்கிறது பெருங் காயம் நமது உணவு தயாரிப்பில் முக்கிய இடம் பெற்றுள்ளது. அது சிறந்த அருமருந்தாக உள்ளது. தேன் மஞ்சளும் இதுபோல் பயன்படு கின்றது. மஞ்சள் பல வகை நோய் அணுக்களை அழிக்க வல்லது என்பது தெளிவு, நாள்தோறும் ஒரு தேக்கரண்டி மஞ்சள் பொடியை சாப்பிட்டு வந்தால், பலவகை நோய்கள் தீர்வதுடன் பாம்புக்கடி போன்ற நச்சுகளுக்கு ஆரம்பப் பாதுகாப்பாகவும் இருந்து வருகிறது.

## மற்றும் பல

தாவரங்களிலிருந்து பலவகையான அற்புத மருந்துகள் தயாரிக்கப் படுகின்றன. சந்தனத்திற்கு சொறி சிரங்கையும், வெட்டை முதலிய மூத்திர வியாதிகளையும் தீர்க்கும் சக்தி இருக்கிறது. ரோஜாப்பூ மலச் சிக்கலை நீக்கும். சிங்கோனு மலேரியா காய்ச்சலைப் போக்கும். காப்பி, மத்திய நரம்புத் தொடரை தூண்டிவிடும். சுக்கு, இஞ்சி, வயிற்று பொருமல், வாயு முதலியவற்றைப் போக்கும். பாக்கு, நாடாப் புழு, வட்டக்புழு இரண்டையும் கொல்லும்.

## சருமத்திற்கு அழகூட்டும் பூச்சுகள்

இவ்வாறு மூலிகைகள் நாட்டில் பல்லாண்டு கலமாக மருந்துகள் தயாரிக்கப் பயன்பட்டு வருகின்றன. அவைகள் பலவகை அழகூட்டும் பூச்சுகள் தயாரிக்கவும் பயன்படுத்த மேனுட்டினர் மிகவும் நாட்டமுடை யவர்களாக இருக்கின்றனர்.

## ஜப்பானில் மஞ்சள் மோகம்

மஞ்சள் தூளையும், சந்தனத் தூளையும் கலந்து தயாரிக்கப்படும் பூச்சுக்கு ஜப்பானில் மிகுந்த கிராக்கியிருக்கிறது,

## சீயக்காய்

சீயக்காய், ரீதா போன்ற காய்களால் தயாரிக்கப்படும் கூந்தல் சுத்தி கரிப்புக் கலவைகள் எல்லோராலும் மகிழ்வுடன் பயன் படுத்தப்பட்டு வருகிறது. கூந்தல் அழகை பாதுகாக்க மருதாணி பல வகைகளில் பயன்படுகின்றது.

## விளக்கெண்ணெய்

விளக்கெண்ணெய் மூலம் பஞ்சுத்திரி எரித்து தயாரிக்கப்படும் கண் மையை பல மேனுட்டவர் விரும்பி வாங்கி பயன்படுத்துகின்றனர். இது கண்களுக்கு அழகூட்டுவதாக அவர்கள் கருதுகின்றனர்.

## கப்பலேறும் பொருள்கள்

நமது முன்னேர்கள் நமக்கு அழகூட்டும் கலவைகளாக அளித்த பலவகை மூலிகைக் கலவைகள் இன்று நம் நாட்டிலிருந்து, அயல்நாடு களுக்கு கப்பலேற்றி அனுப்பப்பட்டு வருகிறது. மேனுடுகள் மிக வேக மாக இயற்கையை நாடி நெருங்கிவந்து கொண்டிருக்கின்றன. செயற்கை மருந்துகளுக்கு தவிர்க்க முடியாத தீவினைகளிருப்பதை பெரும்பாலோர் உணரத் தொடங்கியுள்ளனர். செயற்கை மருந்துகள் விரைவில் மறைந்து விடக்கூடிய பைத்தியக்கார தயாரிப்புகளாகவும் பலர் கருது கின்றனர்.

இதுபோன்ற உருப்படியான நம்பிக்கை எத்தகைய விளம்பரமும் இன்றி உலகில் ஆயுர்வேத முறைகள் உருவாகியுள்ளன. அமெரிக்க டெலிவிஷனில் ஒரு நிமிட ஒலி, ஒளி பரப்புவதற்காக சுமார் 2,78,000 டாலர் (ரூ. 27 00,000) செலுத்த வேண்டியுள்ளது. ஆனால் இந்திய தயாரிப்பாளர்கள், தமது மூலிகை மருந்துகளுக்கு இவ்வளவு செலவில் விளம்பரம் செய்வதற்கு கனவுகூட காண முடியாது.

### மலிவானவை

இம் மருந்துகள் ஏற்றுமதி செய்யப்படுவதால் பெருமளவில் அயல் நாட்டுச் செலாவணி கிட்டுமென்றும் எதிர்பார்ப்பதற்கில்லை. ஏனெனில், இவையனைத்தும் மிகவும் மலிவான தயாரிப்புகளே. இந்த மூலிகைகள் அனைத்தும் குறிப்பிட்ட காலத்தில் சில இடங்களிலேயே கிடைக்குமாகையால், அவைகளை உரிய காலத்தில் சேமித்து வைக்க வேண்டும் என்பதே தயாரிப்பாளர்களுக்குள்ள ஒரு தலைவலியாகும். இந்த சேமிப்புகள், தயாரிப்பாளர்களுக்கு அவர்கள் தயாரிக்கும் மலிவு விலை மருந்துகளின் மதிப்பீடுகளுக்கு ஏற்ப வங்கிகள் அனுமதிக்கும் கடன் வசதிகளால் உருவாக்கிவிட முடியாது. உலக மார்க்கட்டுகளில் நடமாடும் தரத்திற்கொத்த (Packaging) பொட்டலம் கட்டும் திறனின்மையும், உலக மார்க்கெட்டில் இத்தயாரிப்புகள் பெறவல்ல விலை பெற இயலாமையுமே இத்திண்டாட்டத்திற்குக் காரணம்.

### துயரம் பலவிதம்

இவ்வாறு நாட்டு மருந்து தயாரிப்பாளர்களின் துயரங்கள் பலவிதமாகும். மூலிகைகளிலிருந்து தயாரிக்கப்படும் மருந்துகளுக்கு, அரசு சுங்க வரியிலிருந்து விலக்களிக்கப்படுகிறது: ஆனால், இந்தத் தாராள மனப்போக்கை நிர்வாகம் இல்லாததாக்கி விடுகிறது. சுங்க வரித் துறைக்கு ஒரு தயாரிப்பு மூலிகை மருந்தா, அன்றி இல்லையா என்று முடிவு செய்ய எத்தகைய அதிகாரமும் இல்லை. மருந்து கட்டுப்பாடு துறைக்கு அண்மையில் ஒரு நாட்டு மருந்து ஆலோசகர் நியமிக்கப்பட்டிருக்கிறார் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

### நாட்டு மருந்து லைசன்ஸ்

பம்பாயில் நாட்டு மருந்து உற்பத்தி செய்யும் ஒரு தயாரிப்பாளருக்கு தோல் பூச்சுக் கலவை தயாரிப்பாளர் அனுமதிச் சீட்டை ரத்து செய்துவிட்டு, நாட்டு மருந்து தயாரிப்பாளர் அனுமதி வழங்கப்பட்டிருக்கிறது. எனவே அந்த நிறுவனம் ஆயுர்வேத மருந்து தயாரிப்ப

தற்களிக்கப்பட்டுள்ள அனுமதிச் சீட்டின் படி, தனது கலவைகளை தயாரித்து வருகின்றது. ஆனால் மத்திய சுங்கவரித்துறை இந்த அனுமதிச் சீட்டை ஏற்க மறுக்கிறது.

## சாமி வரம் கொடுத்தாலும் பூசாரி வரம் இல்லை

'நான் ஆயுர்வேத மூலிகைக் கலவைகளையே தயாரித்து வருகிறேன் என்பது உலகனைத்திற்கும் தெரியும். அவைகளின் பெயர்களும் விளம்பரங்களும் அவை மூலிகைகளால் தயாரிக்கப்பட்டவை என்றே கூறுகின்றன. அயல்நாட்டினர் அவைகளை வாங்குவதற்குக் காரணம் அவைகள் மூலிகைகளால் தயாரிக்கப்பட்டவை என்பதாலேயே அப்படியிருந்தும் மத்திய சுங்கவரி துறைக்கு எனது தயாரிப்புகள் வேறு முறை தயாரிப்புகள் என்று கூற சான்றுகளிருந்தால், அவர்கள் உடனே அவ்வாறு செய்யப்படும்' என்று ஒரு தயாரிப்பாளர் கூறியிருக்கிறார். சட்டசபையின் நல்லெண்ணத்தை உணர கூறும் பொழுது நிர்வாக இயக்கத்தினர் இல்வாறே சொல்கின்றனர். நிறுவனம் மூலிகைகளைக் கொண்டு தமது கலவைகளை தயாரித்து வருகின்றது. ஆனால், இது சட்டசபை விதிவிலக்களிக்கப்பட்டுள்ள சுங்க வரியையும் செலுத்தி வருகிறது.

ஆயுர்வேத மருத்துவக் கல்லூரிகளிலும் பாடத்திட்டங்கள் பல வகைகளில் குறைபாடுடையவையாகவே இருக்கின்றன. இவை சீர்படுத்த வேண்டுப். அங்கு, மாணவர்கள் விருப்பத்திற்கிணங்கி ஆங்கில முறை மருத்துவமும் ஓரளவு போதிக்கப்படுகிறது. இத்துறை மேலும் ஆழ்ந்த கவனத்திற்கும், திட்டமிட்ட செயலுக்கும் உரியது. ꣸

— நன்றி : எக்னமிக் டைம்ஸ்
(சர்வோதயம்)

---

## கவனிக்க

சென்னையில் வீட்டு எண்கள் மாற்றம் காரணமாக, மூலிகைமணி அலுவலக எண்ணும் மாறியுள்ளது. கீழ்க்கண்டவாறு இனி முகவரி எழுதுமாறு வாசகர்கள் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்கள்.

மூலிகை மணி
அஞ்சல் பெட்டி எண் : 1406
19, அருளாம்பாள் தெரு,
தி. நகர், சென்னை-600 017

என்று திருத்திய எண்ணுடன் எழுதுமாறு கேட்டுக்கொள்கின்றோம்.

# இதய ஒலி

அன்புடையீர்,

நான் தங்கள் மூலிகை மணியின் நிரந்தர வாசகன் தாங்கள் தினமணி ஞாயிறு மலரில் மூலிகைக் கட்டுரைகள் எழுதிவரும் போதிலிருந்தே அவைகளைப் படித்துப் பலருக்கும் இனுமாகப் பயன்படுத்தி வருபவன். சித்த மருத்துவத்தையும் மூலிகைகளின் விளக்கங்களைப் படங்களுடன் வெளியிடுவதையும் தமிழகத்தில் வெளிப்படையாக வெளியிட்ட முதற்பெருமை தங்களைத்தான் சாரும் அதன் பிறகுதான் வேறு பலரும் தங்களுக்குப் போட்டியாக அம்முயற்சியில் ஈடுபட்டுள்ளதாகத் தெரிகிறது.

தங்களின் தொண்டு வாழ்க.

து. வேலுசாமி,
இளநிலை உதவியாளர்,
சார்பதிவாளர் அலுவலம்,
விராலிமலை அஞ்சல்
குளத்தூர் Tk., புதுக்கோட்டை Dt.

∴ ∴ ∴ ∴

R. V. NARAYANAN

Bhandarkar Oriental
Research Institute
Poona-411004

Dear Dr.

I trust this finds you in the best of health.

Last year, I came to your plece at T. Nagar. I had desired then to buy the old Volumes of Mooligaimani. But as I was in a hurry, I bought only 'Nam Naattu Muligaikal' (நம்நாட்டு மூலிகைகள்) 7 Volumes. I would like to have the further Volumes. You have take great pains to study the herbel medicines and give very useful guidence as to their specific uses indicating the variety of manifestation of diseases. I am very happy to say, I am intellectually very much profitted by your Observations.

# அனுபவம் உணர்த்தும் உண்மை

நான் தங்களிடம் எனது தாயாரின் கண்களுக்காக நேத்திரப் பூண்டு தைலம் இரண்டு முறை வாங்கி உபயோகித்து வந்ததில் சிறிது குணம் காணப்படுகிறது.

A. ராமசாமி
நடுவலசு.

தங்களின் நேத்திரப்பூண்டு தைலம் எனக்குப் பலன் கொடுத்து வருகிறது.

K. ஆறுமுகம்
குமாஸ்தா தபால் ஆபீஸ்
ஈரோடு-5

நான் 'அவுரி தைலத்திற்காக' ரூ 14/- அனுப்பியிருக்கிறேன் உடனடியாக அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறேன் கிடைத்த பிறகு இன்னும் இரண்டு ஆர்டர்கள் அனுப்புகிறேன். தங்களின் தைலம் மிகவும் அருமையான பலனளிக்சிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன் உடனடியாக அனுப்பி வைக்கவும்.

S. G. சுந்தரராமன்
9, ராஜமணி ஐயர் காலனி, அறந்தாங்கி,
P. O. 613616 புதுக்கோட்டை ஜில்லா,

நம் நாட்டு மூலிகைகளில் முசுமுசுக்கை பாடத்தில் சொல்லியபடி தூதுவளையுடன், சூரணம் செய்து கருவேலம் கோந்து சேர்த்து சாப்பிட்டதில் ஆஸ்துமா குணம் ஏற்பட்டுள்ளது. நன்றி!

K. S. திரவியம்
S. B. A. பெரியார் பிராஜெக்ட், P. O.
மதுரை ஜில்லா.

வெளியிடுபவரும் ஆசிரியரும்: வேலூர் மருத்துவர்
ஆ. இரா. கண்ணப்பர், R. M. P. 19, அருளாம்பாள் வீதி, தி. நகர்
சென்னை-600017. மூலிகை மணி அச்சகத்தில் அச்சிட்டவர்:
K பாபு, DME சென்னை-600 030.

"தலைமுறை தோறும் பயன்படும்
ஒப்பற்ற மூலிகை மருத்துவ நூல்கள்"

மூலிகை மணி கண்ணப்பரின்
கீழ்க்கண்ட ஆய்வு நூல்கள்

ஒவ்வொரு குடும்பத்திலும் இன்றியமையாது இருக்க வேண்டிய இணையற்ற நூல்கள். பட விளக்கங்களும், பயன் முறைகளும் நிறைந்தவை.

1. நம் நாட்டு மூலிகைகள்
   1 முதல் 7 பாகங்கள் 1 செட் விலை ரூ. 49
   (ஒவ்வொரு பாகமும் விலை ரூ. 7)
2. நோயும் - மருந்தும்
   4 பாகங்கள் 1 செட் ரூ. 8
3. பயன் தரும் பத்துக் கீரைகள் ரூ. 1
4. ஆய்வு நோக்கில் நாட்டுப்புற மருத்துவர் ரூ. 7
5. அன்றாட வாழ்வில் மூலிகைகள் ரூ. 3
6. புதிய பார்வையில் சித்த மருத்துவம் ரூ. 9

நூலின் விலையை மட்டும் அனுப்புங்கள் எமது அஞ்சல் செலவில் புத்தகங்களை அனுப்புகின்றோம்.

முகவரி : ஆ. இரா. கண்ணப்பர் R.M.P.
19, அருளாம்பாள் தெரு, தி. நகர்,
சென்னை-600017 அஞ்சல் பெட்டி எண் : 1406.

Printed by K. Babu, D.M.E. at Mooligai Mani Press, Madras-600 030
Edited & Published Dr. A. R. Kannappar, R.M.P., 19, Arulambal St., T. Nagar. Madras-600 017.